# திருக்கோயில்கள் வழிகாட்டி

## கோயமுத்தூர், நீலகிரி மாவட்டங்கள்







தமிழ்நாடு அரசு

இந்து சமய அறநிலையத்துறை வெளியீடு

முதற் பதிப்பு : ஜூலை 2014

முன் அட்டை : அருள்மிகு சுப்பிரமணியசுவாமி
மருதமலை, கோவை.

பின் அட்டை : வெள்ளியங்கிரிமலை – பூண்டி.

அச்சிடுவோர் : கார்த்திகேயன் ஆப்செட் பிரிண்டர்ஸ்
அவிநாசி.

விலை : ரூ. 100.00

மேலும் வெளிநாட்டு, உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள், குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய கலாச்சாரத்தை அறியவும், தங்கள் பயணத் திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும். மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத் துறையினரால் வெளியிடப்பட்டமைக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும் மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது அவ்வைப் பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி, தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவற்றைப் பண்புக் களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலைச் சிற்பங்களையும், ஓவியக் கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேருவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோயிலின் தொன்மைகருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு, நெஞ்சுருக நின்று, நினைத்ததை வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாகும். இக்கையேடு வெளியிடுவதற்குத் தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில் களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

நன்றி!

ரா கண்ணன்
28/05/2014

(முனைவர் ரா.கண்ணன்)

**பூ. செந்தூர் பாண்டியன்**
இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009
நாள்: 23.5.2014

## வாழ்த்துச் செய்தி

ஒலியின் ஓசையாய், ஓங்காரத் திருவடியாய் எல்லோரும் போற்றும் வெற்றித் திருமகளாய், தமிழர்களின் குலவிளக்காய் மாண்புமிகு இதய தெய்வம் அம்மா அவர்களின் நல்லாசியோடு இந்த வாழ்த்துச் செய்தியை வழங்குகிறேன்.

இலட்சிய வேட்கையுடன், உலகமே வியந்து போற்றும் உன்னத திட்டங்களால், தொலைநோக்குப் பார்வையால் தமிழகத்தை முதன்மை மாநிலமாக எல்லாத் துறைகளிலும் வழிநடத்தும் அம்மா அவர்களின் மணிமகுடச் செயல்களில் ஒன்றாக இத்திருக்கோயில்கள் வழிகாட்டி புத்தகம் அமைகிறது.

பிறவி எடுத்ததன் பலனை ஒவ்வொரு மனிதனும் அடைய வேண்டும் என்றால் ஆன்மாவைப் பற்றி அறிய வேண்டும். ஆன்மாவைப் பற்றி அறிய ஒரே வழி திருக்கோயில்களுக்கு சென்று வழிபடுவதே. மனித மனம் உயரவும், சமூக வாழ்க்கை சிறக்கவும் அனைவருக்கும் வழிகாட்டியாகத் திகழ்வது திருக்கோயில்களே.

தமிழகத்தின் பெருமையே திருக்கோயில்களை சார்ந்துதான் அமைகிறது. தமிழகத்தில் கோவை, நீலகிரி மாவட்டங்களின் திருக்கோயில் வழிகாட்டி புத்தகம் பக்தர்களுக்கும், பக்திச் சுற்றுலாப் பயணிகளுக்கும் கருத்துப் பெட்டகமாகவும், கருவூலமாகவும் திகழும் என்பதில் ஐயம் இல்லை.

இவ்வழிகாட்டி புத்தகம் எல்லா வகையிலும் மின்னி மிளிர்கிறது. இதனை நேர்த்தியோடு உருவாக்கிய அனைத்து நெஞ்சங்களுக்கும், வாங்கிப் பயன்பெறும் உள்ளங்களுக்கும், என் அன்பையும், நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்களையும் நெகிழ்வோடு பதிவு செய்கிறேன்.

அன்புடன்

(பூ.செந்தூர் பாண்டியன்)

**முனைவர் ரா.கண்ணன்,** இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்



சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை – 9.
தொலைபேசி: 044 - 25670820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்
திருக்கோயிலில்லாத திருவிலூர்"
...."ஊரல்ல அடவி காடே"

என்னும் கருத்தாழம், தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ளத் துணியும்போது ஏற்படும் மனச்சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள், மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருக்கோயில்கள், இராசித்தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கி பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோவிலைப் பார்க்கும்போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டை ஓவியங்கள் அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இலர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் புராண வரலாற்றுக் காலத்தில் இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன.

உதாரணமாகத் திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றாலச் சித்ர சபை ஓவியங்கள் போன்றவை ஆதலால், அதிகாரப்பூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிகாட்டி நூல் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

**ப.தனபால்,** எம்.ஏ., பி.எல்.,
ஆணையர்
இந்துசமய அறநிலையத்துறை



119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம் பாக்கம்
சென்னை – 600034
அலுவலகம் : 044-2833 4815
நிகரி : 044-2833 4816
மின்னஞ்சல் : tn.endowments@gmail.com

## வாழ்த்துரை

"கால்களால் பயன்என் கறைக்கண்டேன் உறை கோயில்
கோபுரக் கோகரணம் சூழாக் கால்களால் பயன்என்"

என்னும் நாவுக்கரசரின் நன்மொழிக்கேற்ப ஆயிரம் நாமம் உரைப்பினும் அணுப்பொழுதாவது அவன் அருளாலே அவன் தலம் நின்று அவன் தாள் வணங்கி மகிழ்வதற்கு ஈடில்லை என்பார்கள். இப்பேரின்பத்தை எந்நாளும் அனுபூதியடையக் கிடைத்த வாய்ப்பு வாழ்நாளில் கிடைத்த பிறவிப் பயனாகும்.

சமயத்தின் மூலம் உயர் பண்பினையும் ஒழுக்கத்தையும், நம்பிக்கையையும், இடர்பாடுகளைச் சமாளிக்கும் மனப்பான்மையையும் ஏற்படுத்துதல் முடியும். உண்மை, தூய்மை, அன்பு, நேர்மை, அயராத நம்பிக்கை போன்ற உயர் பண்புகளை மக்களிடையே ஏற்படுத்தி மனித ஆளுமை வளர்ச்சிக்கு பெரிதும் உதவுவது திருக்கோயில்கள் சார்ந்த பண்பாட்டு அசைவுகளே ஆகும். அதனால்தான் அரசன் முதல் சாமானியன் வரை அவரவர் அரண்மனைகளையும் இல்லங்களையும் காப்பதைவிட ஆலயங்களை காத்து வந்தனர். அந்த வகையில் தமிழகத்தின் ஒவ்வொரு தலமும் ஒரு சிறப்புப் பெற்றவை. தலங்கள் தோறும் தரிசிப்பதால் முன்னோர்கள் தடம் பதித்த மண்ணில் நாமும் சென்று நிற்கும் புண்ணியம் அடைந்தவர்களாகிறோம்.

நல்லறம் செய்து நற்கதி எய்திட சென்றிடுவீர்! சிறப்புப்பெற்ற திருக்கோயில்களுக்கு பக்தி நெறியினிற் சென்று பரகதிவேட்கையராகிப் பாவம் நீங்கிச் சித்திபெற முயல்வோர்க்கு இந்நூல் பெரிதும் ஆற்றுப்படுத்தும்.

இவ்வழிகாட்டி நூல் வெளிவர உதவிய நல் உள்ளங்களுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்து அனைவரும் இறைவன் திருவருளால் எல்லா வளமும் பெற்று பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்.

நன்றி!

(ப.தனபால்)

பொருளடக்கம்

# கோயமுத்தூர் மாவட்டம்

# நீலகிரி மாவட்டம்



## 1. அருள்மிகு
## விநாயகர் திருக்கோயில்

ஈச்சநாரி

ஓங்கார நாதமாக விளங்கும் விநாயகப்பெருமான் எழுந்தருளி அருள்புரியும் திருக்கோயில்களின் வரிசையில் மகுடத்தில் மின்னும் வைரமாகத் திகழ்வது, கோவை – ஈச்சநாரி விநாயகர் திருக்கோயில்,

கோவை – பொள்ளாச்சி செல்லும் சாலையில், கோவையிலிருந்து 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள திருக்கோயிலை, நகரப்பேருந்துகள் மூலமாகவும், வெளியூர் பேருந்துகள் மூலமாகவும் சென்றடையலாம்.

கொங்குநாட்டில் தொன்மைவாய்ந்த திருக்கோயில்களில் ஒன்றான பேரூர் பட்டீசுவரசுவாமி திருக்கோயிலில் எழுந்தருளவைப்பதற்காக, சுமார் 6 அடி உயரம் கொண்ட இந்த விநாயகர் திருமேனியை, மாட்டு வண்டியில், மதுரையிலிருந்து எடுத்து வரும்போது, தற்போது நிலை கொண்டுள்ள இடத்தில் வண்டியின் அச்சு



முறிந்துபோய், பிறகு பேரூருக்கு எடுத்துச் செல்ல முயன்றும் இயலாமல் போய்விட, இந்த இடத்திலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டார். அதன்பின்னர் திருக்கோயிலும் அமைந்து குடமுழுக்கு நன்னீராட்டு விழாவும் நடைபெற்றது.

தினமும் 6 கால பூஜை சிறப்பாக செய்யப்படுகிறது. அதிகாலை 5 மணிக்கு திறக்கப்படும் திருக்கோயில் இரவு 10 மணிக்கு நடைசார்த்தப்படுகிறது.

நாள்தோறும் காலை 5 மணிக்கு கணபதி வேள்வியுடன் கூடிய சிறப்பு அபிகேமும், அலங்காரமும் மக்கள் வெள்ளத்தை ஈர்ப்பதாகும். அதுமட்டுமல்ல 27 நட்சத்திரங்களுக்கு, வெவ்வேறு விதமான அலங்காரங்கள் செய்யப்படுவதும் ஈச்சனாரியின் தனிச்சிறப்பு ஆகும்.

மாதாந்திர சதுர்த்தி, சங்கடஹர சதுர்த்தி, கிருத்திகை, பௌர்ணமி ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. விநாயகர் சதுர்த்தியும், தமிழ் புத்தாண்டும் பெருவிழாக்களாகக் கொண்டாடப்படுகின்றன.



## தங்கத்தேர்

தமிழ்நாட்டிலேயே விநாயகப்பெருமானுக்கு தங்கத்தேர் உள்ள ஒரே ஆலயம் இதுவே. ரூபாய் 50 லட்சம் செலவில் உருவான தங்கரதத்தில் நாள்தோறும் இரவு 7 மணிக்கு விநாயகர் வீதி உலா வரும் வைபவம் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது.

## அன்னதானம்

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## கருணை இல்லம்

ஏழை மாணவர்களுக்கு உதவிட திருக்கோயில் சார்பில் கருணை இல்லம் ஒன்றும் நடத்தப்படுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 5.00 மணி – இரவு 10.00 மணி

**தொலைபேசி : 0422 - 2672200**

மின் அஞ்சல் : eachanarivinayagar@tnhrce.org

இணையதளம் : www.eachanarivinayagar.com





## 2. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

### மருதமலை

ஏழாவது படைவீடு என்று புகழப்படும் மருதமலை மேற்குத் தொடர்ச்சி மலையில் கோவை மாநகரிலிருந்து 14 கி.மீ. தொலைவில் உள்ளது. அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி பழனி முருகனைப் போல அழகிய திருமேனி. முப்புறமும் மலைகளால் சூழப்பட்டு, 500 அடி உயரத்தில் உள்ள மலைக்கோயிலை 837 படிகள் வழியே மேலேறியும், சாலையில் வாகனங்கள் மூலமாகவும் செல்லலாம்.

மலையடிவாரத்தில், தான்தோன்றி விநாயகர் கோயில் உள்ளது. இவரை வழிபட்ட பின்னரே பக்தர்கள் மலை ஏறுவர். மருதமரங்கள் நிறைந்த வனப்பகுதியாக இருந்ததால் மருதமலை என்றும், மலைமீது குடிகொண்டுள்ள முருகனை "மருதமலையான்" என்றும், "மருதாசல மூர்த்தி" என்றும் அழைக்கின்றனர். அருணகிரிநாதர் திருப்புகழ் கொண்ட தலம்.

படிகளில் ஏறும் பாதையில் இடும்பன் சந்நிதி உள்ளது. உருண்டை வடிவமான பாறையில் காவடியைச் சுமந்து செல்லும் தோற்றத்தில் இடும்பனைத் தரிசிக்கலாம். குழந்தைப்பேறு இல்லாதவர்கள், இடும்பனை வணங்கி

மக்கட்பேறு பெறுவர்.

தீபத்தம்பத்திற்கு எதிரே மகா மண்டபம், மயில் வாகனமும் பக்தர்களை எதிர்கொண்டழைக்கின்றன. முருகனின் அருள் பெற்ற பாம்பாட்டிச் சித்தர் வடித்த சிலையே, கருவறையில் உள்ளது. சிரசில் கண்டிகையும், பின்புறம் குடுமியுடன், காலில் தண்டையுடன் காட்சி தரும் முருகன், அரைக்கச்சையுடன் வலது கரத்தில் ஞானத் தண்டேந்தி இடது கரத்தை இடுப்பில் வைத்தபடி கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார்.

நாள்தோறும் ராஜ அலங்காரம், விபூதிக்காப்பு, சந்தனக்காப்பு என மூன்று அலங்காரங்களுடன் காட்சி தருகிறார் மருதாசலமூர்த்தி கிருத்திகை, தைப்பூசம் போன்ற விசே நாட்களில் தங்கக் கவசம் அணிந்து காட்சி தருகிறார்.

ஈசுவரன், அன்னை இருவருக்கும் நடுவே “சோமாஸ்கந்தராக” மூலவர் எழுந்தருளியுள்ளது தனிச்சிறப்பு. பிரதான சந்நிதிக்கு வலப்புறம் “ஆதி மூலஸ்தானம்” ஆகும். அருவுருவத் திருமேனியாக லிங்க வடிவில் இங்கே முருகப்பெருமான் காட்சி தருகிறார்.

மலைப்பாறைகளுக்கு இடையில் உள்ள குகை ஒன்றில் பாம்பாட்டிச் சித்தர் சந்நிதி உள்ளது. மருதமலையில்



தங்கியிருந்து பாம்புகளைப் பிடித்து ஆட்டுவிக்கும் வல்லமை படைத்தவராக இருந்தவர். வலதுகரத்தில் மகுடியும், இடது கரத்தில் தடியும் கொண்டு காட்சி தருகிறார். கூடுவிட்டு கூடுபாயும் வல்லவராம் இவர். சுரங்கப்பாதை வழியே சென்று இன்றும் முருகனுக்கு பூஜை செய்வதாக ஐதீகம். முருகனுக்கு வழிபாடுகள் முடிந்ததும், பாம்பாட்டி சித்தருக்கும் பூஜை செய்யப்படுகிறது. 'சித்தாரூடம்' என்ற நூலையும் இயற்றியவர் இவர்.

பாம்பாட்டிச் சித்தர் சந்நிதியிலேயே பாறையில் நாகர் ஒன்றும் உள்ளது. பாம்பாட்டிச் சித்தருக்கு நாகர் வடிவில் முருகன் காட்சி தந்ததால், இந்த நாகரையே முருகனாக வழிபடுகிறார்கள். பாம்பாட்டி சித்தர் சந்நிதிக்கு செல்லும் பாதையிலேயே "சப்த கன்னிமார்" சந்நிதி உள்ளது.

அர்த்த சாமபூஜையின் போதுமட்டுமே, ஆபரணம், கிரீடம் ஏதும் அணியாமல் தண்டபாணியாக வேட்டி மட்டும் அணிந்தவராக முருகனை தரிசிக்கலாம்..

வைகாசி விசாகத்தன்று 108 பால் குடங்கள் அபிகேம் மருதமலையானுக்கு பெருமைசேர்ப்பதாகும்.

தைப்பூசம், பங்குனி உத்திரம் சிறப்பான திருவிழாக் களாகக் கொண்டாடப்படுகின்றன. தைப்பூசத்தன்று தேர்த் திருவிழா நடைபெறும். மாதாந்திர கிருத்திகை, கார்த்திகை தீபம், தமிழ்ப்புத்தாண்டு, ஆடிப்பதினெட்டு ஆகிய நாட்களிலும் விழாக்கோலம் காண்கிறது மருதமலை.

**தங்கரதம்**

நாள்தோறும் மாலையில் தங்க ரத திருஉலா நடைபெறுவது மருதமலையின் தனிச்சிறப்பு ஆகும்.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப் பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**கருணை இல்லம்**

ஆதரவற்ற குழந்தைகளுக்காக 'கருணை இல்லம்' ஒன்றும் மேல்நிலைப்பள்ளி ஒன்றும் திருக்கோயிலால் நடத்தப்படுகிறது.

**ஆன்மீக வகுப்புகள்**

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆன்மீக வகுப்புகள் நடைபெறுகின்றன.

இராஜகோபுரத் திருப்பணி நடைபெற்று 18.03.2013 அன்று குடமுழுக்கு நடைபெற்றது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – மதியம் 1.00 மணி
பகல் 2.00 – இரவு 9.00 மணி

நாள்தோறும் 4 கால பூஜை நடைபெறுகிறது.

தொலைபேசி : 0422 – 2422490 (மலைக்கோயில்),
0422 – 2423623 (அடிவாரம்)

மின் அஞ்சல் : maruthamalaimurugan@tnhrce.org

இணையம் : www.maruthamalaikoil.org





## 3. அருள்மிகு
## பட்டீசுவரசுவாமி திருக்கோயில்
பேரூர்

| | |
|---|---|
| **இறைவன்** | **அருள்மிகு பட்டீசுவரசுவாமி (சுயம்பு லிங்கம்)** |
| **இறைவி** | **அருள்மிகு பச்சைநாயகி அம்மன்** |
| **தீர்த்தம்** | **சிருங்க தீர்த்தம்** |
| **தல விருட்சம்** | **பன்னீர் மரம்** |
| **ஆகமம்** | **காரணாகமம்** |

கோயமுத்தூர் மாநகரிலிருந்து தென்மேற்கே, சிறுவாணி– வெள்ளியங்கிரி செல்லும் நெடுஞ்சாலையில் 6 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது பேரூர். நொய்யல் ஆற்றின் தென் கரையில் அமைந்துள்ள இத்திருத்தலம் ஆன்பட்டி, மேலைச்சிதம்பரம், காஞ்சிவாய்ப் பேரூர், இனாம் பேரூர், அரசம்பலம் என்ற பெயர் கொண்டது.

வரலாற்றுச் சிறப்புமிக்க அருள்மிகு பட்டீசுவரசுவாமித் திருக்கோயில் இங்கு உள்ளது. பேரூர் – ஆன்பட்டி என்று அழைக்கப்படும் தேவார வைப்புத்தலம் ஆகும். நால்வர் பெருமக்களின் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனார்

இத்திருத்தலத்திற்கு வருகை தந்துள்ளார். அருணகிரிநாதரும் இத்தலத்தில் உள்ள முருகனைப் போற்றிப்பாடியுள்ளார். சிதம்பரத்திற்கு அடுத்தப்படியாக திருவாதிரைத் திருவிழா மிகச்சிறப்பாக இங்கு கொண்டாடப்படுகிறது.

**வரலாறு:** தானும் நான்முகனைப் போல படைப்புத் தொழிலை மேற்கொள்ள வேண்டும் என விரும்பிய காமதேனு. இத்தலத்திற்கு வந்து கடும் தவம் இருந்தது. புற்றுவடிவில் இங்கு இருந்த சிவலிங்கத் திருமேனிமீது தினமும் பாலைச் சொரிந்து வழிபட்டது. ஓர்முழுமதி நாளில் அதன் கன்றான “பட்டி” துள்ளிக் குதித்து விளையாடும் போது, அதன் குளம்பு புற்றினை அழுத்தி, அதன் கால் சிக்கிக் கொண்டது.

கன்றின் காலைப் புற்றிலிருந்து விடுவிக்க, ‘காமதேனு’ தனது கொம்பினால் புற்றை உடைத்திட, குத்திய குளம்புச் சுவடு, கால்சுவடு வழியே குருதி வெளிப்பட்டது. ‘சூரிய உதயம்’ ஆகும் நேரத்தில் காமதேனு இந்தக் காட்சியைக் கண்டு தனது செயலுக்காக வருந்தியது.

அப்போது இறைவன், உமாதேவியோடு இடப வாகனத்தில் அமர்ந்தபடி காட்சி தந்து, காமதேனுவே, உனது இளங்கன்றின் செயலை நாம் குற்றமாகக் கருதவில்லை. உமாதேவியின் வளைத்தழும்பும் , கொங்கைத் தழும்பும் நம் மார்பில் மகிழ்ச்சியோடு ஏற்றதுபோல, எமது முடியில்



கொம்புச் சுவடும், குளம்புச் சுவடும் ஏற்போம்! காமதேனுவாகிய நீ எம்மைஇத்தலத்தில் வழிபட்டதால், இத்தலம் காமதேனுபுரி, பட்டிபுரி எனும் பெயரோடு யாரும் "பட்டிநாதர்" என்று திருநாமங் கொள்வோம்! என்று கூறி அருள் செய்தார்.

பேரூர் அருள்மிகு பட்டீசுவரசுவாமி திருக்கோயில் 2.07 ஏக்கர் நிலப்பரப்பில் கிழக்கு நோக்கி 5 நிலை ராஜகோபுரமும், இரண்டு பிரகாரங்களையும் கொண்டுள்ளது. புனிதநீராடல் காஞ்சிமாநதி, பிரம்மதீர்த்தம் ஆகியன. தலமரம் – பன்னீர் மரம். கோமுனி, பட்டிமுனி ஆகிய இருவருக்காக இங்குள்ள கனகசபையில் எம்பெருமான் ''ஆனந்த தாண்டவம்'' ஆடியுள்ளார்.

இராஜகோபுரத்தையடுத்து நீண்ட நெடிய வழியின் இருபுறமும் சிற்பங்கள் நிறைந்த இருபது அழகிய தூண்கள் உள்ளன. வெளிச்சுற்றைக் கடந்து பட்டீசுவரர் சந்நிதியை நோக்கிச் சென்றால் கொடிமரம், பலிபீடம், நந்திதேவர், ஆகியவற்றை தரிசிக்கலாம். இரண்டாம் சுற்று நுழைவாயில் மேலே 3 நிலை கோபுரம் உள்ளது. நுழைவாயிலின் இருபுறமும் விநாயகரும், சண்முகரும் எழுந்தருளியுள்ளனர்.

அர்த்தமண்டபத்தின் வடமேற்குப்பகுதியில் கருவறையையொட்டி மனோன்மணி அம்மையின் செப்புத் திருமேனி உள்ளது. காமதேனுவின் கொம்புப்பகுதி உருவான சிருங்கி தீர்த்தம் வலப்புறம் உள்ளது.

கருவறையில் அருள்மிகு பட்டீசுவரர் தானே முளைத்த உளிபடாத திருமேனியாக எழுந்தருளியுள்ளார். சிவலிங்கத்



திருமேனியின் முடியில் குளம்புச்சுவடும், கொம்புச்சுவடும் திருமஞ்சனம் நடைபெறும் போது தெளிவாகக் காண முடிகிறது. கோமுகியை அடுத்து சண்டிகேசுவரர் சந்நிதி உள்ளது. கருவறையைச் சுற்றிலும், இரண்டாவது சுற்றில் அறுபத்துமூவர் சகஸ்ர லிங்கம், கணபதி, தண்டபாணி சந்நதிகளோடு தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், துர்க்கை சந்நதிகள் உள்ளன. முக்தித்தலம் என்பதால் பைரவர் நாய் வாகனமின்றிக் காணப்படுகிறார்.

மேலைச்சிதம்பரம்

17ம் நூற்றாண்டில், மதுரை திருமலை நாயக்கரின் சகோதரர் அழகாத்திரி நாயக்கரால் கட்டப்பட்ட “கனகசபை” ஒரு சிற்பக் கருவூலம் ஆகும். “மேலைச் சிதம்பரம்” என்று அழைத்திடப் பொருத்தமாக, 28 துாண்களில் அழகிய சிற்பங்கள் உள்ளன. ஆனைமுகன், ஆறுமுகன், ஊர்த்துவதாண்டவர், ஆலங்காட்டுக் காளி, அகோர வீரபத்திரர், அக்னி வீரபத்திரர், பிட்சாடனர், கஜசம்காரமூர்த்தி ஆகிய சிற்பங்கள், காண்போர் மனதையும், கருத்தையும் கவரக் கூடியவை ஆகும். சுவையான செவிவழிச் செய்தி, இந்த கனகசபையை வடிவமைத்த சிற்பி கம்பனாச் சாரியின் கதை.

நான்முகனும் திருமாலும் கோமுனியாகவும், பட்டி முனியாகவும், கரங்கூப்பி வாயிலின் இருபுறமும் நிற்க, கனகசபையில் ஆடல்வல்லானின் அழகுத்திருக்கோலம் ஓர் அற்புதம்.



"மீ கொங்குல் அணி காஞ்சிவாய்ப் பேரூரர்

பெருமானைப் புலியூர்ச்

சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே!"

என்று வர்ணித்துள்ளார் சுந்தரர். இந்த வரிகள், இத்திருத்தலத்து நடராசப்பெருமானையும், தில்லை நடராசப் பெருமானையும் இணைத்து போற்றிய பதிகம் ஆகும்.

**பேரூர் திருத்தலத்தின் பிற சிறப்புக்கள்**

1.என்றுமே அழியாத இறவாப்பனை மரம். 2. விதைகள் என்றும் முளைக்காத பிறவாப்புளி 3. நொய்யலாற்றில் கரைக்கப்படும் மனித எலும்புகள், கூழாங்கற்களாக மாறுவது. 4. பேரூரில் மாடுகளின் சாணம் என்றுமே புழுப்பதில்லை. 5. இத்திருத்தலத்தில் மரணமடைவோர், வலதுகாதை மேலே உயர்த்திய வண்ணம் உயிர்நீப்பர். அப்போது இறைவனே அவர்களுக்கு ஐந்தெழுத்தை ஓதி பேறு தருவதாக மரபு!

வட மொழியில் இயற்றப்பட்ட பேரூர் தலபுராணத்தை திருவாவடுதுறை ஆதீனம், கச்சியப்ப முனிவர் தமிழில் பேரூர்ப் புராணம் என்று, 2220 செய்யுள் கொண்டதாக இயற்றியுள்ளார். "பேரூர் நாட்டுக் கோவன்புத்தூர்" என்று கல்வெட்டுக்குறிப்புகள் கூறுகின்றன. வழிபாட்டுக்கு உதவும்



பணியாளர்களுக்கு ஊதியம் எப்படி வழங்கப்பட்டது என்பதை விளக்கும் கல்வெட்டு. 'ஸ்வஸ்தி ஸ்ரீ கோனேரின்மைகொண்டான் திருவான்பட்டி உடையார் காரியம் செய்வோர்களுக்கு நஞ்சேனாதி பதிகளுள் கண் ராதித்தன் செட்டி யான இராசராச பங்காள நாடுடையானுக்கு நம் சேனாதிபதி கேரள நல்லூரின் பெருமாச்சி

நல்லூரில் சிவபாத சேகர மன்னறையில்; அதிராச வாய்க்காலுக்கு வடக்கு, கொங்கு வல்விவதிக்குக் கிழக்கு, புறத் துண்டத்து நெல் விதை முக்கலத்தில் இத்தேவர் பங்குனித் திருநாள் விண்ணாளருக்கு, இவன் விட்ட நெல்விதை இரு கலத்தினால் மேல் வாரத்தில் நெல் இருப்பது நாற் கலத்துக்குச் செலவாகத் திருவமுதுக்கு அரிசி தூணிப்பதக்கு நாலும், வெஞ்சன முட்பட நெல் கலனே. தூணிப்பதக்கும், திருமடத்துக்கும் அரிசி நாள் கலத்தினால் வெஞ்சனம் உட்பட நெல் பதினைங்கலமும், தூணி அறுநாழியும், பூஜை செய்யும் நம்பியார்க்கும், திருப்பள்ளித்தாமம் பறிப்பானுக்கும், தொடுப்பானுக்கும், திடுக்கு ஊதுவானுக்கும், நெல் கலனேதூரை திருவீதி பணி செய்வோர்க்கும் ஆண்டார்களுக்கும், நெல் இரு தூனிப்பதக்கு, திருவிளக்கெண்ணெய்க்குறி நானாழிக்கு நெல் நாற்கலம் திருப்பதிகம் பாடுவோர்க்கும், நட்டுவர்களுக்கும் நெல் தூணிப்பதக்கும். இருகல நெல் விதையில் பாட்டநெல் இருபத்து நாற்கலனும், தூணிப்பதக்கும் கொண்டு தர்மம் செலுத்துக. இது பன்மாகேச்சுரர் ரக்ஷை காரண ஆகம முறைப்படி ஐந்து கால வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**திருவிழாக்கள்**

பட்டீசுவரர் திருக்கோயிலில் ஆண்டு முழுவதும் பலவிதமான விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. அப்போது திருக்கோயில் முழுவதும் சுத்தம் செய்து கோலமிட்டு அழகுபடுத்தி தீப அலங்காரங்கள் செய்யப்பட்டு சிறப்பாக வழிபாடுகள் நடைபெறும். வைகாசி – ஆனி மாதம் பத்து நாட்கள் நடைபெறும். “நாற்று நடவு” உற்சவமும், மார்கழி மாதம் ஆருத்ரா தரிசனம் திருவாதிரை உற்சவமும், தைமாதம் மூன்று நாட்கள் தைப்பூசத்திருநாள் – திருக்கல்யாணம், திருத்தேர், தெப்பம் மற்றும் பங்குனி மாதம் 10 நாட்கள் பங்குனி உத்திரத் திருநாள் மிகச்சிறப்பாக கொண்டாடப்படும் விழாக்களாகும்.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**கருணை இல்லம்**

ஆதரவற்ற குழந்தைகளுக்காக "கருணை இல்லம்" ஒன்று திருக்கோயிலால் நடத்தப்படுகிறது.

**திருக்குளம்**

திருக்கோயிலின் எதிரே அமைந்துள்ளது திருக்குளம். கொங்கு நாட்டினை 1489-1517 வரையில் ஆண்ட தெற்கநாம்பி அரசர் காலத்தில் மாதையன் என்ற அமைச்சர் இந்தத் திருக்குளத்தை கட்டியதோடு அவன் படிகளில் தனது பெயரையும் தமிழிலும், கன்னட மொழியிலும் செதுக்கியுள்ளான். குளத்தின் கிழக்கு கரையில் மாதையனால் கட்டப்பட்ட மாதேஸ்வரன் கோயில் உள்ளது. இந்த குளத்தில் ஐந்து புனிதத் தீர்த்தங்கள் உள்ளன.

**அழகிய சிற்றம்பலம்**

பட்டீசுவரர் திருக்கோயிலுக்கு இடப்புறம் அமைந்ததால் இடங்கை நாயக ஈசுவரமுடையார் என்று கல்வெட்டுக்களில் குறிப்பு உள்ளது.

**காலவேசுவரம்**

அரசம்பலவானர் சந்நிதி. இந்தகோயிலில்தான் ஆதிஅரசமரம் உள்ளது. காலவ முனிவர் வழிபட்டதால் காலவேசுவரம் எனப்படுகிறது. இதன் வாயிலில் இராஜகோபுரம்




இல்லை. நான்கு கால் மண்டபத்தின் மேல் நந்திதேவர் சிலை உள்ளது. பங்குனி உத்திர நாளில் அனைத்து தேவர்களும் காணும் வகையில் நடராசப்பெருமான் திருநடனம் செய்தருளிய இடம்.

### வடகைலாயம்

பிரம்மயாகம் செய்த மகேசுவரனை வழிப்பட்ட இடம் பிரம்மதீர்த்தம் இங்கு உள்ளது. செப்புக்காசுகளை இதன் நீரில் போட்டால் களிப்பு நீங்கி பொற்காசுகள் போல மின்னிடுமாம். திருநீற்றுமேடு என்று அழைக்கப்பட்ட பகுதியே நான்முகன் வேள்வி செய்த இடம். பழங்காலத்தில் இந்த மண்ணே திரு நீறாக வழங்கப்பட்டு வந்ததாம். இறவாப்பனை இதற்கு அருகில் உள்ளது.

### தென்கைலாயம்

பேரூருக்கு தென்மேற்கில் உள்ளது. இங்கு பல அரிய கல்வெட்டுக்கள் கண்டறியப்பட்டுள்ளன. காஞ்சிமாநதி சோழன் படித்துறைக்கு செல்லும் பாதையில் பட்டிவிநாயகர் சந்நிதி உள்ளது.

### திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 5.30 – 1.00 மணி, மாலை 4.00 – 9.00 மணி

தொலைபேசி: 0422 – 2607991

மின் அஞ்சல்: patteeswararperur@tnhrce.org



### பட்டிமேடை

கொங்கு நாட்டில் அமைத்து சிவாலயங்ளுக்கு முன்புறம் பட்டிமேடை என்ற பெயரில் ஒரு மேடை உள்ளதைக் காணலாம். அதன்மீது அரசமரமும் அதன் நிழலில் நாகலிங்கங்களும், விநாயகரும் இருக்கக் காணலாம். பொங்கல் திருநாள், ஆதிரை திருநாள், ஆகிய நாட்களில் மாடுகளை இந்தப் பட்டிமேடையைச் சுற்றி வலம் வர வைப்பர். இது பட்டி சுற்றுதல் என்றழைக்கப்படுகிறது.

கோவைப் பேரூர் இறைவன் பட்டீசர் என்று வழங்குவதும் இத்தலத்தில் அரசமரத்தடியில் இறைவன் நடனமாடியதையும் அதையொட்டி, இங்குள்ள நடராஜ சபை அரசம்பலம் என்றும் அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது.





## 4. அருள்மிகு வெள்ளியங்கிரி ஆண்டவர் திருக்கோயில்

பூண்டி

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வெள்ளியங்கிரி ஆண்டவர் |
| இறைவி | அருள்மிகு மனோன்மணி அம்மன் |
| தீர்த்தம் | ஆண்டிச்சுனை தீர்த்தம் |

கோவை மாநகருக்கு, மேற்கில் 36 கி.மீ. தொலைவில் மேற்கு தொடர்ச்சி மலையடிவாரத்தில் இருந்து 5.4 கி.மீ. தொலைவில், வில் போல வளைந்துள்ள பஞ்சகிரி எனப்படும் ஐந்து மலைகளின் நடுவே அமைந்துள்ளது. பேரூர் தலபுராணத்தின் வரலாற்றுப் படலத்தில் 41-45 பாடல்களில் வெள்ளியங்கிரியின் சிறப்புப் பற்றி கூறப்பட்டுள்ளது.

தட்சிண கைலாயம், வெள்ளிமலை, பூலோக கைலாயம், ரசத கிரி என்று அழைக்கப்படுகிறது. "தானே முளைத்தெழுந்த சுயம்புத் திருமேனி." வசந்த காலத்தில் பிப்ரவரி முதல் மே மாதம் முடிய திரளாக மலையேறி வெள்ளியங்கிரி நாதரை தரிசிப்பர். முழுமதி நாட்களில் தடியூன்றியவாறு மலையை ஏறிச்செல்லும் கூட்டம் பிரமிக்க வைக்கும்.

சிவ பெருமானின் ஐந்து முகங்களுக்கு இணையான ஐந்து சிகரங்களுக்கும், ஆங்காங்கே சிவலிங்கத் திருமேனிகளும், புண்ணிய நதிகளும், அரிய மூலிகைகள் மற்றும் நறுமணம் வீசும் மலர்கள் கொண்ட வனப்பகுதியும் எழில் கூட்டுவதாகும்.

தக்கன் நடத்திய வேள்விக்குச் சென்ற தேவர்கள் அனைவரும் ஈசனின் கோபத்திற்குள்ளாக, புல்லும், மூங்கிலுமாக மாறிப் போயினர். சாபம் நீங்கிய பின்னர் அனைவரும் வெள்ளியங்கிரி மலையேறி, ஈசனின் திருநடனத்தை கண்டு சாபம் நீங்கினர்.

அர்ச்சுனன், பாசுபதம் வேண்டி ஈசனை நோக்கி தவம் இருந்ததும், வெள்ளியங்கிரி மலையில்தான். அந்த பாசுபதத்தை நினைவில் கொண்டு பக்தர்கள், மூங்கில் தடிகளை வாங்கிச் சென்று மலை ஏறுகின்றனர். அகத்தியர், முருகப்பெருமனை வழிப்பட்டதலம்.

பேரூர் தலபுராணத்தில் வரலாற்று படலத்தில், 41-45 பாடல்களில், வெள்ளியங்கிரியின் சிறப்பு பற்றி கூறப்பட்டுள்ளது. பிப்ரவரி முதல் மேமாதம் வரை வெள்ளியங்கிரி மலைக்குப் பாதயாத்திரை செல்வோர், பல லட்சம் பேர் ஆவர். பிற மாநிலங்களிலிருந்தும் பக்தர்கள் வருவதைக் காணலாம். கார்த்திகை தீபம், தைப்பொங்கல், சிவராத்திரி, பங்குனி உத்திரம், சித்ரா பௌர்ணமி, தமிழ்ப்புத்தாண்டு நாட்கள் முக்கியமான திருவிழா நாட்கள் ஆகும்.

ஆண்டு முழுவதும் அன்பர்கள் வழிபடுவதற்காக அடிவாரத்தில், மனோன்மணி அம்மையுடன் வெள்ளியங்கிரி ஆண்டவர் திருக்கோயில் கொண்டுள்ளார். நடராசப் பெருமானுக்கும், விநாயக பெருமானுக்கும் தனிச்சந்நதிகள் உள்ளன.



**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**ஆன்மீக வகுப்புகள்**

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆன்மீக வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

நான்கு கால வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 1.00 மணி

மாலை 3.00 மணி – இரவு 7.00 மணி

**தொலைபேசி** : 0422 – 2615258

**மின் அஞ்சல்** : Poondivellingiri @ vsnl.net

Poondivellingiri@gmail.com

**இணையதளம்** : www.poondivellingiriandavar.com






## 5. அருள்மிகு முந்தி விநாயர் திருக்கோயில்

புலியகுளம், கோவை நகரம்

தென்கிழக்கு ஆசியாவிலேயே மிகப் பெரிய உயரமான விநாயகர் திருமேனி என்ற சிறப்பைப் பெற்ற முந்தி விநாயகர், கோவை நகரத்தின் மையப்பகுதியில், புலியகுளம் என்னும் இடத்தில் அமர்ந்து உள்ளார். சிலையின் எடை பீடத்துடன் 190 டன். உயரம் 19 அடி 10 அங்குலம். வலம் வந்து தொழுவோருக்கு நல்லவை அருளும் வலம்புரி விநாயகராக முந்தி விநாயகர் விசுவரூப தரிசனத்தோடு எழுந்தருளி யுள்ளார். கண்டாலே பிரமிப்பூட்டும் இந்த சிலை உருவாக 16 ஆண்டுகள் பிடித்தன.

ஊத்துக்குளி என்ற கிராமத்தில், பத்து சிற்பிகள் 1983ல் துவங்கி இரவு பகலாக 16 ஆண்டுகள் பணியாற்றி, சிலையை செய்து முடித்தனர். பிறகு அங்கிருந்து விநாயகர் சிலை 42 சக்கரங்கள் பொருத்தப்பட்ட சரக்கு உந்தில் ஏற்றப்பட்டு, நத்தை போல நகர்ந்து கோவை புலியகுளம் வந்து சேர 28 நாட்கள் ஆயின.

முக்கண்கள் கொண்ட முந்திவிநாயகர், கிழக்கு நோக்கியபடி அருள்பாலிக்கிறார். வலது இடது மேற்கரங்களில் அங்குசமும், பாசமும், வலது முன்கரத்தில் எழுத்தாணியும், இடது முன் கரத்தில் மோதகமும், துதிக்கையில் அமிர்த கலசத்தையும் ஏந்தியபடி அமர்ந்துள்ளார். வாசுகிப்பாம்பு விநாயகரின் வயிற்றைச் சுற்றி ஆபரணமாகத் திகழ்கிறது.

இத்தகைய பெரிய விநாயகர் சிலைக்கு எப்படி திருமஞ்சனம் செய்து மாலை, வஸ்திரம் செய்து அலங்கரிப்பார்கள்? பிரமிப்பாக உள்ளது அல்லவா? ஏணிப்படிகள் வழியே சென்று தலைக்கு உயரே நின்றபடி அபிகேம் செய்கிறார்கள். பக்கவாட்டுப்படிகள் மூலமாக உயரே சென்று நெற்றியில் திருநீறும், சந்தனமும் அணிவிக்கிறார்கள். மேலே நின்றபடி அகண்ட தோள்களுக்கு மாலையும், வஸ்திரமும் அருகம்புல் மாலையும் அணிவிக்கிறார்கள்.



முந்தி விநாயகருக்கு காலை 5.30 மணிக்கு, அதிகாலை காலசந்தி வழிபாடு, தமிழ்போற்றி வழிபாடு மற்றும் ருத்ர பாராயணம், மதியம் ஐந்து கிலோ பொங்கலுடன் பலவித சித்திரான்னங்கள் படைக்கப்பட்டு அன்னதானம், மாலையில் நவதானியம் வகைகள், நைவேத்தியம் படைக்கப்பட்டு தேவார, திருவாசக பதிகங்கள் ஓதி தீபாராதனை நடைபெறும். இரவில் 8.30 மணிக்கு அர்த்தசாமவழிபாட்டுடன் தினப்படி பூஜைகள் நிறைவேறும்.

வாரம்தோறும் வெள்ளிக்கிழமை வளர்பிறை சதுர்த்தி, சஷ்டி ஆகியவை விநாயகருக்கு உகந்த நாட்கள். 1008 தாமரை மலர்களால் விநாயகருக்கு அர்ச்சனை செய்வது முந்தி விநாயகர் திருக்கோயிலின் சிறப்பு ஆகும். விநாயகர் சதுர்த்தி, சங்கடஹர சதுர்த்தி, தமிழ்ப்புத்தாண்டு நாள் போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும்.

நாள்தோறும் மூன்று கால பூசை நடைபெறும்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 5.30 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 9.00 மணி

தொலைபேசி : 0422 – 2318822



## 6. அருள்மிகு கோனியம்மன் திருக்கோயில்

### கோவை நகர்

செல்வச்செழிப்பும் வளமையும், பெருமையும் கொண்ட கோவை மாநகரில் கோட்டை ஈசுவரன், பேட்டை ஈசுவரன் ஆகிய இரு சிவாலயங்களுக்கு நடுவில் வடக்கு நோக்கியபடி நெற்றிக்கண் போல அமைந்துள்ளது. அருள்மிகு கோனியம்மன் திருக்கோயில்.

கோவை நகரின் காவல் தெய்வமாக விளங்கும் அன்னை கோனியம்மன் திருக்கோயில் நகரின் மையப்பகுதியில் மாநகராட்சி அலுவலகம் பெரிய கடைவீதி ஆகியவற்றிற்கு மிக அருகில் அமைந்துள்ளது.

சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன்னர் இக்கோயில் தோன்றியது என்று கூறலாம். பேரூர் பழமையான ஊர் ஆனதால் புதிதாக ஊர் ஒன்று அதன் கிழக்கே தோன்றியது. கோவன் என்ற இருளர் தலைவன், காட்டைத் திருத்தி நாட்டை அமைத்ததால், கோவன்புத்தூர் என்று பெயர் பெற்றது. "பேரூர் நாட்டுக் கோவன் புத்தூர்" என்று அப்போது இதனை அழைத்தனர்.





பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் இளங்கோசர் என்ற அரசன் சேரர் படையெடுப்பிலிருந்து கொங்கு நாட்டைக் காத்திட ஒரு பெரிய மண் கோட்டையையும், மேட்டையும் புதிதாக கட்டி அதன் காவல் தெய்வமாக வடக்கு நோக்கியபடி, கோனியம்மன் எழுந்தருளச் செய்தான் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.

மைசூர் அரசர் ஆட்சி காலத்தில் திருக்கோயில் விரிவாக்கப்பட்டு ஆகமவிதிகளின்படி வழிபாடுகளும், திருவிழாக்களும் நடைபெற்று வரலாயிற்று.

"கோனியம்மன்" என்றால் அரசர்களால் வழிபடப்படும் தெய்வம் என்று பொருள், "கோ" அரசர்க்கரசன் என்றும் அதுவே திரிந்து, கோனி என்று ஆகி கோனியம்மன் – அரசிக்கரசி என்று மருவியதாகவும் கொள்ளலாம்.

கருவறையில் வடக்கு வாயிற் செல்வியாக அருள்மிகு கோனியம்மன் எட்டு கரங்களோடு, அசுரனை வதம் செய்யும் கோலத்தில் எழுந்தருளியுள்ளாள். இரண்டரை அடி உயரம் கொண்ட அம்மனின் சிலை அசுரனை எதிர்த்து சிரசை வீரவாளினால் வெட்டி வீழ்த்தும் அருட்கோலத்தில் உள்ளது. அன்னையின் வலது கரங்கள் நான்கிலும், சூலம் உடுக்கை, வாள், சங்கம் ஆகிய ஆயுதங்களும், இடது கரங்கள்

நான்கிலும் கபாலம், அக்னி, மணி, சக்கரம் ஆகிய ஆயுதங்களும் உள்ளன. இடது செவியில் தோடும், வலது செவியில் குண்டலமும் அணிந்துள்ளாள் அன்னை. உலாவரும் உற்சவத் திருமேனி நான்கு திருக்கரங்களோடு சூலம், வாள், உடுக்கை, அக்னி ஆகியவற்றை தாங்கியபடி உள்ளது.

**ஆதிகோனியம்மன்**

கோசர்களால் பிரதிட்டை செய்யப்பட்ட "கோனியம்மன் சிலை" தலையில் கிரீடமும், நான்கு கரங்களில் ஆயுதங்களை ஏந்தியபடி விளங்கியதாம். படையெடுப்பு, மதவெறியாட்டம் ஆகியவற்றால் அந்தத் திருமேனி சிதைந்து அதன் தலைப்பகுதி மட்டும் இன்று ஆதிகோனியம்மன் என்ற பெயரோடு ஆலயத்தின் மேற்புறத்தில் உள்ளது. அதன் அருகிலேயே மாகாளியம்மன் சிலையுடன் சப்தகன்னியர்கள் சிலைகளும் உள்ளன. கன்னிப் பெண்களின் தீராத வயிற்றுவலி, மாதாந்திர துன்பங்கள் நீங்கிட சப்தகன்னியருக்கு செம்பருத்தி மாலை அணிவித்து வணங்கி வழிபடுவது சிறப்பாகும்.





ஆலயத்தின் நுழைவாயிலில் அரசமரத்தடியில் பஞ்சமுக விநாயகர் தரிசனம் தருகிறார். முன்மண்டபமும், மகாமண்டபமும் கண்ணைக் கவருகின்றன. மேற்குச்சுற்றில் மூலத்தானத்தின் கிழக்கே சாந்த விநாயகர் சந்நிதியும் இடப்புறம் முருகப் பெருமான் சந்நிதியும் உள்ளன. நவக்கிரக நாயகர்கள் தங்கள் நாயகியரோடு அமர்ந்திருப்பது தனிச்சிறப்பாகும்.

**தேர்த்திருவிழா**

கோவை மாவட்டத்திற்கே பெருமைசேர்ப்பது கோனியம்மனின் தேர்த்திருவிழா ஆகும். கோவை நகரில் நடைபெறும் மிகப்பெரிய தேர்த்திருவிழா கோனியம்மனின் தேர்த்திருவிழா. எனவே நகரின் அத்தனை பகுதி மக்களும், நகரைச்சுற்றியுள்ள பகுதி மக்களும் பெருந்திரளாக வந்து தேர்வடம் பிடித்திழுப்பதைக் காணலாம். மாசிமாதம் 14 நாட்கள் நடைபெறும் இத்திருவிழா கோலாகலமாக இருக்கும். மாசி முதல் செவ்வாய் அன்று பூச்சாட்டு, இரண்டாவது செவ்வாயன்று அக்னிச்சாட்டுடன் கொடியேற்றப்பட்டு திருவிழா துவங்கும்.

மூன்றாவது செவ்வாய்க்கிழமை திருக்கல்யாண உற்சவமும் மறுநாள் புதன்கிழமை திருத்தேர் வலமும் நடைபெறும். வெள்ளியன்று இந்திர விமான தெப்பமும், மறுநாள் தீர்த்தவாரி கொடியிறக்கம் என்று வசந்த உற்சவத்துடன் திருவிழா நிறைவுபெறும்.

திருவிழாக்காலத்தில் அன்னை கோனியம்மன் புலி வாகனம், கிளி வாகனம், சிம்ம வாகனம், அன்ன வாகனம், காமதேனு வாகனம், வெள்ளையானை வாகனம், குதிரை வாகனம் ஆகியவற்றில் உலாவரும் காட்சி மனதைக் கொள்ளை கொள்ளும்.

**உப்பு - மஞ்சள் வாங்குதல்**

திருமணச் சடங்குகளில் முக்கியமானது நிச்சயதார்த் தமாகும். கொங்கு நாட்டில் பெரும்பாலும் உப்புக்கூடை மாற்றுக் கொள்வதின்மூலம் திருமணத்தை உறுதிபடுத்திக் கொள்கின்றனர். கோவை மாநகரில் “உப்பு – மஞ்சள்” வாங்குவது என்றாலே கோனியம்மன் கோயில்தான் என்று கூறும் அளவிற்கு இருவீட்டாரும் தங்கள் சுற்றத்தாருடன் கூடி கோனியம்மனுக்கு அபிகேம் செய்வித்து, அலங்கரித்து உப்புக்கூடைகளை மாற்றித் தங்கள் இல்லத்திருமண உறவினை உறுதிப்படுத்திக் கொள்வதை காணலாம்.




**தங்கப்பாவாடை**

பொதுமக்களிடமிருந்து கோனியம்மனுக்கு காணிக்கையாக வரப்பெற்ற பொன் இனங்களைக் கொண்டு அம்மனுக்கு கிரீடம், திருமார்பு, வலதுகரம், இடதுகரம், பாவாடை ஆகியவை உள்ளடங்கிய தங்கப்பாவாடை செய்யப்பட்டு

நவராத்திரி 9 நாட்களிலும் திருக்கோயில் சார்பில் அணிவிக்கப்படுகிறது. பொதுமக்கள் வேண்டுதலின் பேரில் ரூபாய் 500/- கட்டணம் செலுத்தி அம்மனுக்கு சிறப்பு ஆராதனை செய்து தங்கப்பாவாடை சாத்துபடி செய்யலாம்.

**இராஜகோபுரம்**

இத்தனை சிறப்புக்களையும் கொண்ட அருள்மிகு கோனியம்மன் திருக்கோயிலுக்கு அழகிய இராஜகோபுரம் ஒன்று இல்லாதது பக்தர்களிடையே பெருங்குறையாக இருந்து வந்தது. தற்போது உயதாரர் திருப்பணியாக ரூபாய் 2 கோடி மதிப்பீட்டில் 7 நிலை ராஜகோபுரக் கட்டுமானத் திருப்பணி நிறைவுபெற்று 11.07.2014 அன்று குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றது.

**அன்னதானம்**

தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானம் அருள்மிகு கோனியம்மன் திருக்கோயிலில் நாள்தோறும் மதியம் நடைபெற்று வருகிறது.

**பூஜை காலம்**

| | | |
|---|---|---|
| காலை 8.00 மணி | : | காலசந்தி |
| பகல் 12.00 மணி | : | உச்சிகாலம் |
| இரவு 7.00 மணி | : | சாயரட்சை |
| இரவு 8.30 மணி | : | அர்த்தசாமம் |

**திருக்கோயிலில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 9.00 மணி

தொலைபேசி : 0422 – 2396821

மின் அஞ்சல் : koniammantemple.cbe@gmail.com

இணையதளம் : www.kovai-koniammantemple.org



## 7. அருள்மிகு சங்கமேஸ்வரர் திருக்கோயில்

### கோட்டைமேடு, கோவை.

கோவை கோட்டை சங்கமேசுவரர் திருக்கோயில், கோவை மாநகராட்சி, அலுவலகத்திற்கு கிழக்கே, பின்புறம் உள்ள “கோட்டை மேடு” பகுதியில் அமைந்துள்ளது. தற்போது “கோட்டை ஈசுவரன்” கோயில் என்று அழைக்கப்படுகிறது. 13ம் நூற்றாண்டைச் சார்ந்த ஆறு கல்வெட்டுக்கள், சங்கமேசுவரர் மூலத்தானத்திலேயே கிடைக்கப் பெற்றதால், கி.பி.1243-ம் ஆண்டில் “வீரசோழ மங்கலம்” என்று அழைக்கப்பட்ட இடமே தற்போது கோட்டைமேடு என்று அழைக்கப்படுகிறது.

மெக்கன்ஸி என்று ஆங்கிலேய நில ஆய்வாளரின் குறிப்புகளில், பிற்காலம் ராய சமஸ்தானத்தார், மதுரை சமஸ்தானத்தார் நாளையிலே, கோயமுத்தூருக்கு கோட்டை போட்டு..... என்ற வரிகள் காணப்படுவதால் இங்கு விஜய நகர ராஜ்ய காலத்தில் ஒரு கோட்டை கட்டப்பட்டிருக்கலாம் என்று கூறுவர்.

காலப்போக்கில், விஜயநகர மன்னர்களின் பிரதிநிதிகளாக நாயக்கர்கள் கோயமுத்தூரை வசப்படுத்திய காலத்தில் ஹைதர் அலியிடம் சென்று விட்டது.



ஹைதரின் மகன் திப்புசுல்தான் ஆங்கிலேயரை எதிர்த்து நிற்க இயலாமல், பின்வாங்கி சென்றதை பின்வரும் ஆங்கிலேயே ராணுவக் குறிப்பு தெளிவு படுத்துகிறது.

About the middle of December 1792, Major Cubbage, Commander at Palghat received to dislodge the enemy from coimbatore District. He came with 5th and 6th battalion. on arriving at coimbatore he found the place was evacuated and fort destroyed - அதாவது,

1792ம் ஆண்டு டிசம்பர் மாத மத்தியில், பாலக்காடு தளபதியான மேஜர் கப்பேஜுக்கு, கோயமுத்துார் மாவட்டத்திலிருந்து எதிரிகளை விரட்டியடிக்க உத்திரவு கிடைக்கப்பெற்று, கோயமுத்தூரை அடைந்ததும், அந்த நகரம் முழுவதும் காலி செய்யப்பட்டிருந்ததோடு, கோட்டையும் முற்றிலுமாக அழிக்கப்பட்டிருந்ததைக் கண்டார்.

சோழன் பூர்வ பட்டயம் கூறும் செய்திகளின்படி சோழ மன்னன் ஒருவனும் சமய முதலி என்ற குழுவினரும் கொங்குநாடு வந்து காடுதிருத்தி, நாட்டை அமைத்தபோது 36 ஆலயங்களைக் கட்டுவித்தனர். என்று அறியமுடிகிறது. அந்த 36 ஆலயங்களில் கோவன்புத்துார் சங்கமேசுவரர் ஆலயமும் ஒன்று ஆகும்.



இந்த ஆலயத்தில் உள்ள கருவறை, மிகவும் பழமையானதாகும். இதன் மேல் உள்ள விமானம், 200 ஆண்டுகளுக்கு முன்னர்தான் கட்டப்பட்டிருக்க வேண்டும். 1000 ஆண்டுகளுக்கு முன்பு வரை, விமானங்கள் இல்லாமல் கருவறை மட்டுமே உள்ள கோயில்களே உருவாகின. அதிக வேலைப்பாடுகள் இல்லாத போதிகைகளையும், தூணின் கடம் பகுதி சதுரமாகவும் உள்ள சங்கமேசுவரர் கருவறைத் தூண்கள் இது கி.பி.10ம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று தெளிவாக்குகிறது.

ஓய்சாளர் காலத்துக் கல்வெட்டு ஒன்று, கொங்கு நாட்டை வீரவல்லாளன் என்பவன் (1286-1339) ஆண்டு வந்தான் என்றும், அவன் வழங்கிய தானங்கள் பற்றியும் கூறுகிறது. ஓய்சாளர் பலம் குன்றியதும், முகமதியர் கொங்கு நாட்டைக் கைப்பற்றியும் அதே கால கட்டத்தில் மாலிக்காபூர், தென்னகத்தை படையெடுத்துப் பல கோயில்களை கொள்ளை அடித்துச் சிதைத்த செய்திகள் கிடைத்துள்ளன.

“கானல் வெட்டிச் சோதிக்கும் போது கோனியம்மன் சந்நிதிக்குத் தென்புறத்தில் பூர்வத்தில் சோழப் பிரதிஷ்டையான சங்கமேசுவர சுவாமியும் அகிலாண்டேசுவரியும் தென்பட்டபடியால்...”என்று மெகன்ஸீ துரை திரட்டிய

பழஞ்சுவடி கூறியது. சங்கமேசுவர சுவாமி என்ற பெயர் விஜயநகரப் பேரரசு காலத்தில் நிலவியது என்று அறிய முடிகிறது. முகலாயரை விரட்டி வெற்றிகொண்ட விஜயநகரத்தார், கோயமுத்தூரில் கோட்டை அமைக்க வெட்டியபோது இவ்வாலயத்தின் கருவறையைக் கண்டிருக்கின்றனர். கி.பி.1339 முதல் 1365 வரை, இந்த ஆலயத்தில் வழிபாடும் ஏதும் நடக்கவில்லை என்றும் புலப்படுகிறது.

அதன் பின்னர் விஜயநகர அரசர்கள் காலத்தில் (1368–1600) வழிபாடற்ற நிலையிலிருந்து இந்த ஆலயத்தை சீர்படுத்தி, வழிபாட்டைத் துவக்கியுள்ளனர் என்று தெரிகிறது. 1805ல் மாவட்ட ஆட்சியாளராக இருந்த வில்லியம் காரே, மண்ணால் முழுவதும் மூடப்பட்டிருந்த ஆலயத்தை சுத்தப்படுத்தி, வழிபாட்டுக்கு வகை செய்தார் என்றும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.

இவ்வாலயத்தின் முதன்மைத் தெய்வமாக விளங்குபவர் அருள்மிகு சங்கமேசுவரர், சங்குபுஷ்பங்கள் நிறைந்த காட்டை அழித்து இந்த ஆலயம் கட்டப்பட்டதால், சங்கீசுவரர் என்று பெயர் அமைந்ததாக கூறுவர். காலப்போக்கில் இறைவனின் பெயர் சங்கமேசுவரர் என்று நிலைத்து விட்டது.

சதுரவடிவான பீடத்தில், சிவலிங்கத் திருமேனியாக சங்கமேசுவரர் எழுந்தருளியுள்ளார். இடப்புறம் தனிசந்நிதியில் உலகை ஆளும் ஈசுவரி என்ற பொருள்படும் அகிலாண்டேஸ்வரி நின்ற கோலத்தில் நீலோற்பல மலரைக் கையில் ஏந்தியபடி காட்சி தருகிறாள். சங்கமேஸ்வரர் அகிலாண்டேஸ்வரி



சன்னதிகளுக்கு இடையே ஆறுமுகப் பெருமான், 12 கரங்களோடு, வில்லேந்திய வேலனாகக் காட்சி தருகிறார். சிவனுக்கும், சக்திக்கும் இடையில் முருகன் நிலைகொள் சோமாஸ்கந்தராக விளங்குகிறார். மகிழ மரமே இந்த ஆலயத்தின் தலமரம் ஆகும். வெளிச்சுற்றில் உள்ள நீலகண்டேசுவரர் சந்நிதியும், யோக தட்சிணாமூர்த்தி சிலையும், மிகவும் பழமையானவை (சோழர்காலம்)

நாள்தோறும் ஐந்து கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருவிழா**

சித்திரை மாதத்தில் பூச நட்சத்திரத்தில் கொடியேற்றப்பட்டு, 13 நாட்கள் பெருவிழா நடைபெறும். தைமாதம் பூச நட்சத்திரன்று சண்முக சுப்ரமண்யசுவாமி எழுந்தருளி தேரரோட்டம் நடைபெகிறது.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதான திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 11.30 மணி

மாலை 5.00 மணி – இரவு 8.30 மணி

**தொலைபேசி** : 0422 - 2393677

**மின் அஞ்சல்** : eosangameswarar@gmail.com






## 8. அருள்மிகு கரிவரதராஜப் பெருமாள் கோவில்

**கோட்டைமேடு, கோவை.**

எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் கோவையில் அமைந்திருந்த கோட்டையின் வடக்கு அரணாக சங்கமேசுவரர் ஆலயம் இருந்திட, தெற்கு அரணாக அமைந்தது கரிவரதராஜப் பெருமாள் திருக்கோயில். சங்கமேசுவரர் திருக்கோயிலுக்கு தெற்கில் உள்ள இக்கோயிலை உக்கடம் லட்சுமி நரசிம்மர் ஆலயத்திற்கு எதிரே உள்ள சாலை வழியேயும் சென்றடையலாம். கிழக்குப் பார்த்த திருக்கோயில்.

கரிவரதராஜப் பெருமாள் பூமிநாயகி, நீளா நாயகி சமேதராக சேவை சாதிக்கிறார். முன் மண்டபத்தில் மகாலட்சுமி, ஆஞ்சநேயர், சந்நிதிகள் உள்ளன. தனி சந்நிதியில் லட்சுமி ஹயக்ரீவர் உலோகத்திருமேனியாக அமர்ந்துள்ளார்.

### இரண்டு நுழைவு வாயில்கள்

கொங்கு நாட்டிலுள்ள பெருமாள் கோயில்களில், இந்த ஆலயத்தில் மட்டும் இரட்டை நுழைவு வாயில்கள் அமைந்திருப்பது தனிச்சிறப்பு. அதாவது தட்சிணாயன

காலத்தில் ஒரு வாயிலும், உத்திராயன காலத்தில் மற்றொரு வாயிலும் திறக்கப்படுவது முந்தைய காலத்தில் நிலவி வந்த வழக்கமாகும். தற்போது ஒரு வாயில் மட்டுமே திறக்கப்பட்டு வழிபாடு நடைபெற்று வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

நாள்தோறும்இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00மணி – பகல் 11.30 மணி

மாலை 5.00 மணி – இரவு 8.30 மணி

தொலைபேசி: 0422 – 233677

## காத்தாயி அம்மன்

தமிழகத்தின் தொன்மையான தெய்வங்களில் ஒன்று காத்தாயி அம்மன். காக்கும் தெய்வம் காத்தாயி அம்மன் என்று கிராமப்புறங்களில் கோயில் கொண்டுள்ளாள். ஒரு குழந்தையை இடுப்பில் வைத்தபடி அமர்ந்த கோலத்தில் காத்தாயி அம்மனும், அவளுக்கு இடப்புறம் பச்சையம்மனும், பூங்குறத்தியும், வடபுறம் மன்னாதசுவாமியும், இடம்பெறுவர். விநாயகர், முருகன், மகாவிஷ்ணு, நாரதர் தெய்வங்களும் கோயில்கள் பல உள்ளன.

திருக்கோயில் வளாகத்தில் மிகப்பெரிய சுதை உருவங்களாக சப்த முனீசுவரர் இடம்பெறுவதும், எதிர்புறம் பேச்சியம்மன், மதுரைவீரன், கருப்பண்ணசாமி, ஆகிய சிலைகளும் இடம்பெறும். தஞ்சை மாவட்டம், கோவிலூர் நெல்லித்தோப்பு என்னுமிடத்தில் உள்ள காத்தாயி அம்மன் திருக்கோயிலும், குடவாசல் அருகில் சித்தாடி என்னுமிடத்தில் உள்ள கோயிலும், மரத்துறை என்னுமிடத்தில் உள்ள காத்தாயி அம்மன் திருக்கோயிலும் புகழ்பெற்றவையாகும். பண்டிதர் முதல் பாமரர் வரையில் சாதி, இன வேறுபாடின்றி காத்தாயி அம்மனைக் குல தெய்வமாகக் கொண்டுள்ள எண்ணற்ற குடும்பங்கள் உள்ளன.



## 9. அருள்மிகு
## இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில்

உக்கடம், கோவை நகர்

கோவை மாநகரத்தின் தென் பகுதியான உக்கடம் என்னும் வர்த்தக மையப்பகுதியில், கோட்டை மேடுக்கு எதிரே, கிழக்கு திசை நோக்கி அமைந்துள்ள திருக்கோயில் இலட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில். அருகிலேயே உக்கடம் நகரபேருந்து நிலையம் உள்ளது.

500 ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்ட திருக்கோயில், பிரகலாதனை காத்திட, அசுரன் இரணியனை அழித்திட சிங்கவேளாக அவதரித்தார் திருமால். இரணியவதம் முடிந்ததும், உக்ரம் நீங்கி, சாந்த ஸ்வரூபியாக, திருமகளை அணைத்தவாறு, லட்சுமி நரசிம்மராக, பிரகலாதனுக்குக் காட்சி தந்த கோலம்.

நரசிம்ம ஜெயந்தி, சுவாதி நட்சத்திரம், ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.



வைகுண்ட ஏகாதசி திருவிழா மிகப்பெரிய வருடாந்திர திருவிழா ஆகும். புரட்டாசி சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. இத்திருக்கோயிலில் நெய்தீபம் ஏற்றுவது மிகவும் பிரசித்தி பெற்றது.

5 நிலை இராஜகோபுரத் திருப்பணியுடன் திருக்கோயில் முழுவதும் சீரமைக்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.30 மணி – இரவு 8.00 மணி

**தொலைபேசி: 0422 – 2396821**

**மின் அஞ்சல்:** kovailakshminarasimmar@gmail.com

## 40 ஆண்டுகளுக்கு ஒரு முறை குளத்திலிருந்து வெளியே!

காஞ்சிபுரம் ஸ்ரீ வரதராஜப்பெருமாள் கோயில் திருக்குளத்தில் மூழ்கிக் கிடக்கும் அத்திமரத்திலான அத்திவரதர் திருமேனி 40 ஆண்டுக்கு ஒருமுறை வெளியே எடுத்து 10 நாட்கள் ஆராதனை செய்யப்படுகிறது.

அத்திமரத்தில் செய்யப்பட்ட திருமேனிகள், பலநூறு ஆண்டுகள் கெடாமல் இருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது. திருக்கோவிலூர் திரிவிக்ரமமூர்த்தி திருமேனி அத்திமரத்திலானது.



## 10. அருள்மிகு
## பேட்டை ஈஸ்வரன் திருக்கோயில்

ராஜவீதி, கோவை

கோவை மாநகரின் வர்த்தகச் சந்தைப் பகுதியில் பேட்டை என்ற இடத்தில் அமைந்ததால் இதனை பேட்டை ஈசுவரன் கோயில் என்றே மக்கள் அழைக்கிறார்கள். இருநூறு ஆண்டுளுக்கு முன்னர் மைசூர் மன்னர்களால் கட்டப்பட்டதாகக் கூறப்படும் இத்திருக்கோயிலில் விசுவநாதர் – விசாலாட்சி அம்மன் எழுந்தருளியுள்ளனர்.

மூலவர் திருமேனி பாணலிங்கம் ஆகும். கங்கை, நர்மதை போன்ற நதிக்கரைகளில், இத்தகைய பாணலிங்கங்கள் காணப்படும். ஒரு ஏக்கர் பரப்பில் அமைந்த திருக்கோயில்.

மூலவருக்கு முன்புறம் சித்தி விநாயகர் சந்நிதி உள்ளது. பிரதோம், அமாவாசை, பௌர்ணமி போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். இத்திருக்கோயிலுக்கு வடக்கில் கல்யாண வெங்கடரமணர் திருக்கோயில் உள்ளது.

நாள்தோறும் இரண்டுகால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 – 12.00 மணி, மாலை 4.00 – 9.00 மணி



## 11. அருள்மிகு
## வேணுகோபாலசுவாமி திருக்கோயில்

சலிவன் வீதி, கோவை.

கோவை மாநகரின் புகழ்மிக்க ராஜவீதியின் மேற்குக் கோடியில், சலிவன் வீதி சந்திப்பில், கிழக்கு நோக்கி அமைந்துள்ளது இத்திருக்கோயில். 500 ஆண்டுகளுக்கு முன் இப்பகுதி முழுவதும் ஆயப்பாடியாக இருந்ததாம். ஆநிரை மேய்க்கும் ஆயசிறுவர்கள் வழிபாடு செய்வதற்கு கோபால சுவாமிக்கு ஒரு சிறு கோயிலையும் கட்டி வழிபாடு செய்து வந்தனர்.

அப்போது மைசூரை ஆண்டு வந்த உடையார் வம்சத்து அரசர்கள், கோவைப் பகுதியையும் தங்கள் ஆட்சிப் பொறுப்பில் வைத்திருந்தனர். மகப்பேறு இல்லாக் குறை அவர்களை வாட்டி வந்த நிலையில், மன்னர் தமது துணையாருடன்

கோவைப்பகுதிக்கு வருகை தந்தார். அப்போது "குழலூதும் கண்ணன்" அவரது கனவில் தோன்றி, தான் குடிகொண்டுள்ள இடத்தில் ஒரு திருக்கோயில் அமைத்திடுமாறு கூறினாராம். அதனை சிரமேற்கொண்ட உடையார் தமது சேனாபதியான சங்கரய்யன் என்பவரிடம், உடனே அவ்விடத்தில் ஒரு கோயிலை அமைத்திடுமாறு உத்திரவு பிறப்பித்தாராம்.

அதன்படியே உருவான அழகிய கோயிலுக்கு ஆராதனை செய்வதற்காக கூரத்தாழ்வார் வழித்தோன்றல் களான பட்டாசாரியார்களை நியமித்து, அக்ரகார சாமக்குளம் என்ற கிராமத்தை அவர்களுக்கு மானியமாகவும் அளித்தார் மைசூர் அரசர். அப்போது வந்த மைசூர் அரசர், பட்டாச்சாரியார் களுக்கு எழுதிக் கொடுத்த செப்புப் பட்டயம் இன்றைக்கும் அந்த வம்சாவழியினரிடம் பாதுகாப்பாக உள்ளது.

அருள்மிகு வேணுகோபாலசாமி திருக்கோயில் 1.5 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. மூன்று நிலை ராஜகோபுரம் கொண்ட அழகிய கோயிலின் உள்ளே திருக்குளம் அமைந்துள்ளது. கோவை மாவட்டத்திலேயே, திருக்கோயிலுக்குள்ளே தெப்பக்குளம் உள்ள பெருமைபடைத்த ஒரே கோயில் இது.

மணிமண்டபத்தின் அக்னி மூலையில் திருமடைப்பள்ளி அமைந்துள்ளது. பெருமாள் சந்நிதிக்கு இடது பக்கத்தில் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள் திருச்சந்நதி உள்ளது. ஆண்டாள் சந்நிதிக்கு அருகிலேயே, சீதாபிராட்டியோடு ராமபிரான் சேவை சாதிக்கிறார். ராமர் சந்நதிக்கு நேர் எதிரே ஆஞ்சநேயர் சந்நதியும், ராமர் சந்நிதி அருகில் பரமபத வாசலும் அமைந்துள்ளன.

வாராந்திர சனிக்கிழமைகளிலும், மாத ஏகாதசி அன்றும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. மார்கழி மாதத்தில் ராப்பத்து – பகல்பத்து, திருஅத்யயன உற்சவமும், வைகுண்ட ஏகாதசியும்விமரிசையாக நடைபெறுகின்றன.

சக்கரத்தாழ்வார் சந்நிதியில் சித்திரை நட்சத்திரத்தன்று சுதர்சன ஹோமமும், மூன்று மாதங்களுக்கு ஒருமுறை விஷ்ணுபதி புண்ணிய காலத்தில் பெருமாளுக்கு நவகலச ஸ்நபன திருமஞ்சனமும், ஸ்ரீஸூக்த ஹோமமும் நடைபெறுகிறது. பாஞ்சராத்ர ஆகமப்படி வழிபாடுகள் நடைபெறுகின்றன.

துலாபாரம், சோறூட்டல், தத்துகொடுத்தல் ஆகியவை வழக்கமாக நடைபெறும் நேர்த்திக்கடன்கள் ஆகும்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.30 மணி

மாலை 8.00 மணி – இரவு 8.30 மணி

## இருந்தையூர்

வானார் எழிலி மழைவளம் நந்தத்
தேனார் சிமய மலையின் இழிதந்து
நான் மாடக் கூடல் எதிர்கொள்ள ஆனா
மருந்தாகும் தீநீர் மலிதுரை மேய
இருந்துறையூர் அமர்ந்த செல்வ நின்
திருந்தடி தலையுற பரவுதும் தொழுதே

– பரிபாடல்

கூடலழகர், இருந்தையூர் அமர்ந்த செல்வன் எனப்போற்றப்படுகிறார். இருந்தவனமுடையார் ஊராதலால் இருந்தையூர் என்று பெயர் பெற்றது.





## 12. அருள்மிகு
## பாலதண்டாயுதபாணிசுவாமி திருக்கோயில்

சுக்கிரவாரப்பேட்டை, கோவை.

கோவை, மாநகரின் பெருமைக்குரிய ரத்னசபாபதிபுரம் – காந்திபூங்கா – சுக்கிரவாரப்பேட்டை சந்திப்பில் அமைந்துள்ள திருக்கோயில் இது.

பிள்ளைக்கறி சமைத்து சிவனடியாருக்குப் படைத்த சிறுத்தொண்ட நாயனாரின் பெயரால் இப்பகுதியில் ஒரு தர்மசத்திரம் இருந்தது. அதன் அருகிலேயே ஒரு அரசமரத்தடியில் விநாயகர் கோவில் உருவாகி, அதற்குப் பக்கத்திலேயே தண்டபாணிக்கும் ஒரு கோயில் எழுப்பப்பட்டது.

அடிக்கடி பழனி சென்று தண்டாயுதபாணியை தரிசிக்க முடியாதவர்கள், இங்கேயே பாலதண்டாயுதபாணியை வழிபடத்துவங்கினார். பழனி சாது சுவாமிகள் பலகாலம் இந்த முருகனை ஆராதித்துள்ளார். கருவறை, அர்த்த மண்டபம் அனைத்தும் சலவைக்கற்களால் திருப்பணி செய்யப்பட்டுள்ள அழகிய கோயில்.

கல்வி விநாயகர், அரசமரத்தடி விநாயகர், செல்வ விநாயகர் என மூன்று விநாயகர் சந்நிதி அமைந்திருப்பது தனிச்சிறப்பு. தமது நாயகியருடன் எட்டு கிரகங்கள் அமர்ந்திருக்க, ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தில் சூரியன் பவனி வரும், கோலத்தில் அமைந்த நவக்கிரக சந்நிதி இக்கோயிலுக்கு மேலும் பெருமை கூட்டுகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**தங்கரதம்**

திருவிழா நாட்களில் பாலதண்டாயுதபாணி தங்கரதத்தில் வலம் வருகிறார். ரூ.750/- கட்டணம் செலுத்தி பக்தர்கள் தங்கரதம் இழுக்கலாம்.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 5.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 9.00 மணி

தொலைபேசி : 0422 – 2343557

மின் அஞ்சல் : baladhandayuthapanitemple@gmail.com

**ஊஞ்சல்**

ஊஞ்சல் என்பது மனத்தின் குறியீடு ஆகும். அது கடந்த காலத்திலும், நிகழ்காலத்திலும் எதிர்கால நம்பிக்கையிலும் ஓயாது பயணம் செய்து கொண்டே இருக்கும். மனத்தை போலவே முன்னும் பின்னும் ஓயாது அலைந்து கொண்டேயிருக்கும்.

தனது மனத்தின் வடிவமான ஊஞ்சலில் இறைவனை அமர்த்தி, அவர் தமக்கு, மூன்று காலங்களிலும் துணையாய் நிற்பதை உணர்த்துவதற்காகவே “ஊஞ்சல் விழாக்கள்” ஏற்படுத்தப்பட்டு நடைபெறுகின்றன.



## 13. அருள்மிகு
## கோதண்டராமசுவாமி திருக்கோயில்

ராம்நகர், கோவை

கோவை, காந்திபுரம் மத்திய பேருந்து நிலையத்தையொட்டி ராம்நகர் என்றழைக்கப்படும் பகுதியில் அமைந்துள்ள திருக்கோயில்.

அண்மையில் முற்றிலும் புதிதாக திருத்தியமைக்கப்பட்டு திருப்பணி செய்விக்கப்பட்டு, இராஜகோபுரம் அமையப்பெற்ற திருக்கோயில். திருமதிலில் திருமாலின் தசாவதார சிற்பங்கள், நுழைவாசலினையொட்டிய கொடிமரம், மகாமண்டபத்தின் முகப்பில் பட்டாபிராமர், அமர்ந்த கோலத்தில் சீதை, லட்சுமணர், ஆஞ்சநேயரோடு சுதை வடிவில் காட்சி தருகிறார்.

கருவறையைச் சுற்றிலும் அழகிய சிற்பங்கள் கண்ணைக் கவருவதாகும். கோதண்டராமசாமி சந்நிதி எதிரே இரு கரங்கள் கூப்பியபடி ஆஞ்சநேயர் சந்நிதி உள்ளது. விநாயகர், நவகிரகங்கள் தனித்தனி சந்நிதிகளில் உள்ளனர். மேற்குத் திருச்சுற்றில், நந்தி தேவருடன் சிவலிங்கத் திருமேனி தனி சந்நிதியாக அமைந்துள்ளது.

ஆன்மீக சொற்பொழிவுகள் நடத்திட தனி அரங்கமும் உள்ளது. நாள் தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.30 மணி

### சிந்துவெளியில் பசுபதி

சிந்துநதியின் சமவெளியில் தொல்லியல் ஆராய்ச்சியாளர்கள் அகழ்வாராய்ச்சி மேற்கொண்ட இடங்கள் மொகஞ்சதாரோ, ஹரப்பா என்பவை ஆகும். 5000 ஆண்டுகளுக்கு முன்பே, மக்கள் நாகரீகத்தில் தலை சிறந்திருந்ததை இந்த அகழ்வுகள் நிரூபித்துள்ளன. இங்கேயே கிடைத்த முத்திரைகள் பலவற்றில், பல உருவங்கள் காணப்பட்டன.

62வது எண்ணாகக் குறிக்கப்பட்ட முத்திரையில் பத்மாசனத்தில் வீற்றிருந்தபடி முழங்கால்களில் இருகரங்களையும் அகட்டி வைத்தபடி காட்சி தரும் உருவத்தை "பசுபதி" என்றும் குறிப்பிட்டுள்ளனர். இரண்டு கொம்புகளுடன் கூடிய தலைமுடியும் மூன்று முகங்களும் கொண்ட உருவத்தின் தலை மீது ஆலமரத்தையும் காணலாம். அமர்ந்திருக்கும் பீடத்தின் கால்கள், காளையின் கால்களைப் போல உள்ளன. பசுக்கூட்டங்களின் தலைவனாக "பசுபதி" சித்தரிக்கப்பட்டுள்ளதையும், அந்த நாட்களில் சிவவழிபாடு மேலோங்கியிருந்ததையும் இது குறிக்கிறது.



## 14. அருள்மிகு அய்யப்பசுவாமி திருக்கோயில்

புதுசித்தாப்புதூர், கோவை

கோவை, காந்திபுரம் பேருந்து நிலையத்திலிருந்து 1.5 கி.மீ. தொலைவில் உள்ள திருக்கோயில். கேரளத்துப் பாணியில் அமையப்பெற்று, ஆராதனைகளும் தாந்திரீக முறைப்படியே நடைபெறுகின்றன. கேரள ஆகமப்படி அய்யப்பசாமி, விநாயகர், பகவதி, சிவன், குருவாயூரப்பன், முருகன், நவகிரகங்களுக்கும் சந்நிதிகள் அமைந்துள்ளன.

தங்கக்கொடிமரமும், மேற்கூரையும் கொண்ட கோயிலில், சபரிமலையில் பின்பற்றப்படும் விதிமுறைகளே பின்பற்றப்படுகின்றன.

குருவாயூரில் நடைபெறுவது போல, குழந்தைகளுக்கு சோறூட்டல், துலாபாரம், அட்சராப்யாசம் (எழுத்தறிவித்தல்) ஆகியவை சிறப்பாக நடைபெறுகின்றன. மாதம் ஒருமுறை நடைபெறும் "ஸ்ரீ சக்ர வழிபாடு" மிகவும் சிறப்பு வாய்ந்தது.



சுற்றம்பலமும், நமஸ்கார மண்டபமும் கேரளத்து பாணியில் அழகாக அமைக்கப்பட்டு, மடைப்பள்ளியும் நடைப்பந்தலும் தேக்கு மரத்தினால் உருவாக்கப்பட்டுள்ளன. பசுக்கள் நிறைந்த கோசாலையுடன் மிகப்பெரிய நந்தவனம் உள்ளது. ஆண்டு தோறும் எட்டுநாட்கள் திருவிழா கோலாகலமாக நடைபெறுகிறது.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**ஆன்மீக வகுப்புகள்**

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆன்மீக வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 – பகல் 12.00 மணி

மாலை 4.00 – இரவு 8.30 மணி

தொலைபேசி :

0422 – 2523027





## 15. அருள்மிகு ஜெகந்நாதப்பெருமாள் திருக்கோயில்

### பாப்பநாயக்கன்பாளையம்

கோவை மாநகரின் மையப்பகுதியிலிருந்து சற்றே விலகி அவிநாசி சாலையை ஒட்டியபடி அமைந்துள்ள பகுதியான பாப்பநாயக்கன்பாளையத்தில் அமைந்துள்ள திருக்கோயில். ஐந்து நிலை இராஜகோபுரத்துடன், அழகிய திருச்சுற்றுடன் அமைந்துள்ள திருக்கோயில், சங்கு சக்கரம் ஏந்திபடி, அபய ஹஸ்தராக ஜெகநாதப்பெருமாள் சேவை சாதிக்கிறார். விநாயகருக்கும், சப்த கன்னியருக்கும் தனியே சந்நதிகள் அமைந்துள்ளன.



பாஞ்சராத்ர ஆகமப்படி மூன்று கால வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 5.30 – 11.00 மணி

மாலை 5.00 – 8.30 மணி




## 16. அருள்மிகு
## சீனிவாசப்பெருமாள் திருக்கோயில்

### பாப்பநாயக்கன் பாளையம்

அருள்மிகு ஜெகநாதப் பெருமாள் கோயிலுக்கு மிக அருகில் அமைந்துள்ள திருக்கோயில் 5 நிலை இராஜகோபுரம் உடையது.

சீனிவாசப்பெருமாளுக்கு மட்டும் ஒரே சந்நிதியைக் கொண்டுள்ள திருக்கோயில். கருடதம்பம் அதனை அடுத்து நான்குகால் மண்டபமும், அழகிய சிற்பங்களைக் கொண்ட மண்டபமும், திருச்சுற்றில் சக்கரத்தாழ்வார் சந்நிதியும், ஆஞ்சநேயர் சந்நிதியும் உள்ளன.

வைகானச ஆகமப்படி 3 கால வழிபாடுகள் நடைபெறுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 5.30 மணி – பகல் 12.00 மணி

மாலை 5.00 மணி – இரவு 8.30 மணி

தொலைபேசி : 0422 – 2216359





## 17. அருள்மிகு தண்டுமாரியம்மன் திருக்கோயில்

### கோவை

கோவை, மாநகரில், அவிநாசி நெடுஞ்சாலையில் மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம், ரயில் நிலையத்திற்கு மிக அருகில், மேம்பாலத்தின் அருகில் அமைந்துள்ள திருக்கோயில். இப்பகுதி கோவை மாநகரில் உப்பிலிபாளையம் என்று அழைக்கப்படுகிறது.

“தண்டு” என்ற சொல்லுக்கு படைவீரர்களின் கூடாரம் என்ற பொருள். மன்னவருக்கு தண்டு போல் “வடபுலத்து வாதாபி” என்று குறிப்பிடுகிறார் சேக்கிழார்.

திப்புசுல்தான், 18ம் நூற்றாண்டில் வெள்ளையரோடு போரிட்ட காலத்தில் கோவை “கோட்டை மேடு” என்று இன்று அழைக்கப்படும் பகுதியிலிருந்த கோட்டையில் அவனது படைவீரர்கள் முகாமிட்டிருந்தன. அப்போது அவனது படை வீரர்களில் ஒருவனுக்கு வேப்பமரத்தடியில் காட்சி தந்தாள் அன்னை. வேப்பமரத்தின் கிளைகளுக்கிடையே மாரியம்மன் வீற்றிருந்ததை தான் கண்ட காட்சியை தனது நண்பர்களிடம் கூறினான் அவன்.

நண்பர்களோடு, வேப்பமரத்தின் கிளைகளை விலக்கிப் பார்த்தபோது அதிசயித்தனர் அத்தனை பேரும். அவன் கனவில் கண்ட மாரியம்மனை அவர்கள் நேரில் கண்டனர். பசியும், பிணியும், பகையும் நீங்க அன்னையை எண்ணி வழிபட்டனர். நோய் அணுகாத நல்வாழ்வை நல்கிடும் தண்டுமாரியம்மனுக்கு கோயில் ஒன்றும் உருவானது.

கருவறையைச் சுற்றிலும் சுவரில் அழகிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. கிழக்கே ராஜகணபதியும், வெற்றிக்கனி தரும் துர்க்கையும், கொலுவீற்றிருக்கின்றனர். வேலேந்திய முருகனும் அருள்பாலிக்கிறார்.

கருவறை விமானத்தில் சமயபுரம் மாரியம்மன் காமாட்சியம்மன், காசி விசாலாட்சி, கருமாரி, தனலட்சுமி, சரஸ்வதி, அயனமாரியமம்ன், காயத்ரி, கௌமாரி ஆகிய சுதை சிற்பங்கள் அழகூட்டுகின்றன. மேற்குபுறத்தில் அரசமரத்தடி விநாயகரும், கீழ்ப்பகுதியில் நவக்கிர சந்நிதியும் உள்ளன.

வடகிழக்கில் கருப்பராயன், முனியப்பன் ஆகிய சிறு தெய்வங்களின் சந்நிதிகள் இடம் பெற்றுள்ளன.

சித்திரைத் திருவிழாவில் மக்கள் “அக்னிச்சட்டி” ஏந்தி நேர்த்திக்கடன் நிறைவேற்றிட பெரும் எண்ணிக்கையில் திரண்டு வருவதைக் காணலாம்.





தீராத நோய்களைத் தீர்ப்பவள் தண்டு மாரியம்மன், தங்க ரதத்தில் அவள் பவனி வரும் அழகே அழகு!

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**ஆன்மீக வகுப்புகள்**

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆன்மிக வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 1.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 9.00 மணி

தொலைபேசி : 0422 - 23 00360

மின் அஞ்சல் : dhandumari@gmail.com

இணைய தளம் : www.kovaidhandumariamman.org



## 18. அருள்மிகு நாகேசுவரசுவாமி திருக்கோயில்

முட்டம்

கோவை மாநகரிலிருந்து வெள்ளியங்கிரி செல்லும் பாதையில் “செம்மேடு” என்ற சிற்றூரிலிருந்து விலகி வடக்கே ஒரு கிலோ மீட்டர் சென்று முட்டம் நாகேசுவர சுவாமி திருக்கோயிலை அடையலாம்.

காடும், மலையும் முட்டும் இடம் முட்டம் என்ற பெயர் பெற்றது. காகத்தை வட மொழியில் “முட்டம்” என்பர். உ.ம். (குரங்கணில் முட்டம் திருத்தலம்).

நாகராஜர்கள் வழிபட்டதால் “நாகேசுவரமுடையார்” என்ற திருநாமங்கொண்டு இறைவன் எழுந்தருளியுள்ளார். பெரிய கம்பீரமான அழகிய சிவலிங்கத்திருமேனி.

அன்னை “முத்துவாளியம்மன்” என்ற திருநாமம் கொண்டுள்ளாள். அன்னையின் பெயருக்கேற்ப முத்துக்கள் கோர்த்து மாலையாக அணிவிப்பதற்கான அமைப்புகள் பலவற்றை கொண்ட அழகு திருமேனி. தமிழக சிற்பியின் கைவண்ணம் வியப்புக்குரியது.

ஈசுவரன், அம்பிகை ஆகிய இரு சந்நிதிகளுக்கிடையே சோமாஸ்கந்தராக முருகப்பெருமான் சந்நிதியும், அருகிலேயே ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் அமையப் பெற்றுள்ளன.

இராகு தோ பரிகாரத் தலமாக கருதப்படுகிறது. நாள்தோறும் ஒரு கால பூஜை நடைபெறுகிறுது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 9.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 3.00 மணி – இரவு 7.00 மணி

## யார் பெரியவர்?

திருமால் பல திருத்தலங்களில் நின்ற கோலத்திலும், வீற்றிருந்த கோலத்திலும், சயனித்த கோலத்திலும் காட்சி தருகிறார். அங்கே உள்ள திருமால் திருமேனிகளில் எந்த திரு உருவம் பெரியது என்று அறிவோமா?

"**நின்ற கோலத்தில்**" உள்ள மிக உயரமான பெருமாளை, காஞ்சீபுரம் திருஊரகம் திவ்விய தேசத்தில் உலகளந்த பெருமாள் சந்நிதியில் சேவிக்கலாம்.

"**வீற்றிருந்த கோலத்தில்**" மிகப்பெரிய திருமேனியோடு இருக்கும் பெருமாள் திருப்பாடலம் எனும் திவ்விய தேசத்தில் பாண்டவ தூதர் என்னும் பெருமானாவார்.

"**சயனக் கோலத்தில்**" அழகிய வேலைப்பாடு களோடு, குடவரைக் கோயிலில் ஸ்ரீரங்கநாதரை விட பெரிய திருமேனியுடன் எம்பெருமானை புதுக்கோட்டைக்கு அருகில் திருமெய்யம் திவ்விய தேசத்தில் சேவிக்கலாம்.

### நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான்

திருமால், திருநீர்மலை திவ்வியதேசத்தில் நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என நான்கு நிலைகளிலும், மலை அடிவாரக்கோயிலிலும், மலைமேல் உள்ள கோயிலிலும், எம்பெருமான் சேவை சாதிக்கிறார்.





## 19. அருள்மிகு வெங்கடேசப் பெருமாள் திருக்கோயில்

பரமேசுவரன்பாளையம்

கோவைக்கு வடமேற்கில், தொண்டாமுத்தூருக்கு வடக்கில் உள்ள தேவராயபுரம் அருகில் 2 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது இத்திருக்கோயில். இவ்வாலயம் கொங்கு திருப்பதி என தற்போது பிரசித்தி பெற்று வருகிறது.

கலிமூர்க்க விக்கிரமன் என்னும் மன்னர் காலத்தில் (1004 - 1045) இந்தக் கோயில் உருவானதாக சான்றுரைக்கின்றனர் ஆராய்ச்சியாளர்கள்.

700 ஆண்டுகளுக்கு முன்னர் கொங்கு நாட்டை ஆண்ட வீரபாண்டியன் காலத்தில் இந்தத் திருக்கோயிலில் கடைசியாக திருப்பணிகள் நடைபெற்றுள்ளன.

கொங்கு மண்டபத்திற்கே உரித்தான கருட கம்பமும், அதனையடுத்து கருடாழ்வார் சந்நிதியும் உள்ளன.

கருவறையை ஒட்டி நிலத்தடியில் உலோகத் திருமேனிகளை பாதுகாத்திட நிலவறை ஒன்றும் உள்ளது. கருவறையைச் சுற்றிலும் சுவரில் அழகிய சிற்பங்கள் சிங்கம், யாழி, யானை, மீன் முதலியன காணப்படுகின்றன.

கருவறை விதானத்தில் சந்திரனை விழுங்கும் பாம்பு வரையப்பட்டுள்ளது.

நாள்தோறும் ஒரு கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

## நரசிம்ம தரிசனம்

மூன்று கண்களுடன் விளங்குவதால் நரசிம்மருக்கு திரிலோசனன் என்று பெயர். பாதி கண்களை மூடியவாறு, யோகத்தில் ஆனந்தமாக வீற்றிருக்கும் யோகநரசிம்மர், கார்த்திகை மாதத்தில் கண்களை அகலத்திறந்து பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறார்.

கார்த்திகை மாத ஞாயிற்றுக்கிழமைகள் அவர் மூன்று கண்களைத் திறந்து அருள்பாலிப்பதால், அந்த நாட்களில் செய்யப்படும் நரசிம்மதரிசனம் உயர்ந்த பலனைக் கொடுக்குமாம்.

அஞ்சேல் என அபயமளிக்கும் நரசிம்மரின் கைக்கு "எடுத்தகை" (பதாக முத்திரை) என்று பெயர். அந்தக் கையைத் துதித்து, அதன் பெருமைகளை விளக்கி, "எனக்கு கைகொடுத்துத் தூக்கிவிடு" என்னும் முறையில் அமைந்த பாடல்கள் வட மொழியில் பல உள்ளன.

பேளூர் பட்டீசுவரர் ஆலயத்துத் தேரில் ஐந்து முகங்களும் பத்து கரங்களும் கொண்ட நரசிம்மர் வடிவம் இடம் பெற்றுள்ளது காணத்தக்கது.



## 20. அருள்மிகு
## அனுவாவி சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

அனுவாவி

கோவை நகரின் வடமேற்குப் பகுதியில், மேற்குத் தொடர்ச்சி மலையில், கணுவாய் பகுதிக்கு அருகில், 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில். அனுமனுக்கு குமரன் அருள் செய்ததால் “அனுமக் குமரன் மலை” என்று மற்றொரு பெயரும் உண்டு.

“அனு” என்றால் அனுமன் என்றும் “வாவி” என்றால் நீர்நிலை, ஊற்று என்றும் பொருள்படும். அனுமனுக்காக தோற்றுவித்த ஊற்றே “அனுவாவி” ஆகியதாம்.

மலை அடிவாரத்தில் இருந்து ஒரு கி.மீ. உச்சியில் அமைந்த இந்த மலைக்கோயிலை, 500 படிகள் மீது ஏறிச்சென்று அடையலாம். மலைக்கோயிலுக்கு முன்பு இடும்பன் சந்நிதி உள்ளது. கருவறையில் வஜ்ராயுதமும், சக்தி ஆயுதமும் ஏந்தியபடி அபய வரதராக சுப்பிரமணியர், வலப்புறம் வள்ளியும், இடப்புறம் தெய்வானையுடன் கல்யாண சுப்பிரமணியராக காட்சி தருகிறார். கமுகனும் சுதேகனும், துவாரக பாலகர்களாக உள்ளனர்.



அருணாச்சலேசுவரர், சந்நிதிசற்று மேலேயும் கோயில், வளாகத்திலேயே வடக்கு முகமாக ஆஞ்சநேயர் சந்நிதியும் உள்ளன. ஒரு பக்தனைப் போல அனுமான் இரு கரங் கூப்பி சுப்பிரமணியரைத் தொழும் பாவனையில் உள்ளார்.

அருணாச்சலேசுவரர் சந்நிதி அருகில் உள்ளது புனித "அனுவாவி" இந்த ஊற்று எங்கிருந்து வருகிறது என்பது கண்டறிய முடியவில்லை. சூரிய உதயத்திற்கு முன் இந்த ஊற்று நீரில் நீராடினால், மனநோய், சருமநோய் ஆகியவற்றிலிருந்து விடுபடலாம் என்பது பக்தர்ளின் நம்பிக்கை, அனுபவமும் கூட, தொடர்ந்து 12 நாட்கள் இங்கு புனிதநீராடிட மக்கள் வருவதை காணலாம். மகப்பேறு கிட்டிட, திருமணத்தடை நீங்கிட, கல்யாண சுப்பிரமணியருக்கு கல்யாண உற்சவம் நடத்தி பயன் பெற்றோர் பலர்.

தைப்பூசத்திருவிழாவின் போது தேர்த்திருவிழா நடைபெறுகிறது. கிருத்திகை, சஷ்டி, சங்கடஹர சதுர்த்தி போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடுகள் உண்டு.

நாள் தோறும் 4 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 – பகல் 12.00 மணி,

மாலை 4.00 – இரவு 7.30 மணி



## அன்னதானம்

உண்டி கொடுத்தார் உயிர் கொடுத்தார்

– திருமூலர்

தானத்தில் சிறந்தது அன்னதானமே என்று மறைநூல்கள் கூறுகின்றன. மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதான திட்டத்தின் கீழ் பல திருக்கோயில்களில் தினமும் பக்தர்களுக்கு மதிய உணவு வழங்கப்பட்டு வருகிறது.

இந்து சமய அறநிலையத்துறையின் கோவை மண்டலத்தின் கீழ் கோவை, நீலகிரி, மாவட்டங்களில் முக்கிய திருக்கோயில்களில் அன்னதானத்திட்டம் அறிவிக்கப்பட்டு சிறந்த முறையில் செயல்பட்டு வருகிறது.

இந்த சிறப்புமிக்க அன்னதானத்திட்டத்தில் பக்தர்கள் ரூ. 20,000/- முதலீடு செய்து அதிலிருந்து கிடைக்கும் வட்டி மூலம் ஆண்டில் ஒரு நாளைக்கு, தாங்கள் விரும்பும் நாளில், தாங்கள் விரும்பும் பெயரில் பக்தர்களுக்கு அன்னதானம் செய்து நற்பலனை அடையலாம். இந்தத்திட்டத்திற்கு இந்திய அரசின் வருமான வரிச்சட்டம் 80(G) ன் கீழ் வருமான வரிவிலக்கும் அளிக்கப்படுகிறது.

எனவே, பக்தர்கள் இந்த சிறப்புமிக்க அன்னதானத் திட்டத்தில் முதலீடு செய்து தாங்களும் அன்னதானத்தில் பங்கேற்கலாம். தங்களின் குடும்பத்தினரின் பிறந்தநாள், மணநாள், நீத்தார் நினைவு நாள் போன்ற நாட்களில் திருக்கோயிலில் அதற்கென ஒருநாள் கட்டணத்தை செலுத்தி 100 அல்லது 50 பக்தர்களுக்கு மதிய உணவை அன்னதானமாக வழங்கி இறையருள் பெறலாம்.




## 21. அருள்மிகு நவகோடி நாராயணப்பெருமாள் திருக்கோயில்

ஒத்தக்கால்மண்டபம்

கோவை நகருக்கு தெற்கில், பொள்ளாச்சி சாலையில் 23 கி.மீ. தொலைவில் அருகருகே 5 கோயில்கள் உள்ளன. நவகோடி நாராயணப் பெருமாள் திருக்கோயில், புற்றிடங்கொண்டீசுவரர் திருக்கோயில், அங்காளம்மன் திருக்கோயில், வீரபத்திரர் திருக்கோயில் மற்றும் கொண்டத்துக் காளியம்மன் திருக்கோயில் ஆகியன அவை.

400 ஆண்டுகளுக்கு முன்னர் மைசூரை ஆண்ட மன்னர்களால் கட்டப்பட்டதாக கூறப்படும் நவகோடி நாராயணப்பெருமாள் திருக்கோயில், படைவீரர்கள் தங்கி முகாமிடும் கோட்டை போலவே கட்டப்பட்டுள்ளது. ஒற்றர் படையினர் இளைப்பாறிச் செல்லும் மண்டபமே, ஒற்றக்கால் மண்டபம் என்று அழைக்கப்பட்டதாகவும் கூறுவர்.

முற்றிலும் மண்ணால் கட்டப்பட்ட இரு வரிசை மதில் சுவர்கள் உள்ள கோயில். உள்ளே கருவறையில் நவகோடி நாராயணப் பெருமாள் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார் இருபுறமும் ஸ்ரீதேவியும், பூமிதேவியும் காட்சி தருகின்றனர்.

மதுரையிலிருந்து ஸ்ரீ ரங்கம் செல்லும் பாதையில் ராமானுஜர் இத்திருக்கோயிலுக்கு வந்ததன் நினைவாக ராமானுஜர் சிலையும் நிறுவப்பட்டுள்ளது. கருவறையின் இடதுபுறம் 4 அடி உயர ஆஞ்சநேயர் சிலையும் சந்நிதி எதிரே கருடாழ்வாரும் உள்ளனர்.

நாள்தோறும் ஒருகால பூஜை நடைபெறுகிறது.



**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 8.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

தொலைபேசி : 0422 – 2607991

## திருமால் கோயில் விமானங்கள்

| | | |
|---|---|---|
| திருவரங்கம் | – | பிரணாவாகார விமானம் |
| திருஅல்லிக்கோணி | – | ஆனந்தவிமானம் |
| காஞ்சிபுரம் | – | புண்ணியகோடி விமானம் |
| ஒப்பிலியப்பன் கோயில் | – | சுத்தானந்த விமானம் |
| திருக்கண்ணபுரம் | – | உத்பயாவதாக விமானம் |
| திருக்குறுங்குடி | – | பஞ்சகேதக விமானம் |
| மதுரை கூடவழகர் | – | அஷ்டாங்க விமானம் |
| திருக்கண்டியூர் | – | கமலாக்ருதி விமானம் |
| திருநாரையூர் | – | சீனிவாச விமானம் |
| திருஇந்தளூர் | – | வேதாமோத விமானம் |



## 22. அருள்மிகு புற்றிடங்கொண்டீசுவரர் திருக்கோயில்

ஒத்தக்கால்மண்டபம்

கோவை - பொள்ளாச்சி சாலையில், நவகோடி நாராயணப் பெருமாள் திருக்கோயிலை அடுத்து உள்ளது. அருள்மிகு புற்றிடங்கொண்டீசுவரர் திருக்கோயில் 3 நிலை இராஜகோபுரமும், ஒரு பிரகாரமும் கொண்ட அழகிய திருக்கோயில், புற்று ஒன்றில், தானே தோன்றியதால்"புற்றிடங்கொண்டீசுவரர்" என்று அழைக்கப்படுகிறார். அன்னை லோகநாயகி, இடப்புறம் தனி சந்நிதி கொண்டுள்ளாள்.



உள்சுற்றில், அறுபத்து மூவர், ஆலமரச் செல்வர், லிங்கோத்பவர், சண்டிகேசுவரர், துர்கை சந்நிதிகளும் தென்திசை நோக்கியபடி கலையழகு மிக்க ஆடல்வல்லான் சபையும் தனியே அமைந்துள்ளன.

மாதாந்திர சஷ்டி, கிருத்திகை, பிரதோம், பௌர்ணமி நாட்களில் சிறப்பு வழிபாடும், பங்குனி திருத்தேர்விழாவும், தெப்பத்திருவிழாவும் நடைபெறும்.

நாள்தோறும் 2 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

## திருக்கோயில் அமைப்பு முறையும் திருமூலரும்

ஒவ்வொரு மனிதனும் தினமும் சுவாசிக்கும் 21,600 சுவாசத்தைக் குறிக்க சிதம்பரம் திருக்கோயில் கனகசபையில் பொன் ஓடுகள் 21,600 ஆகும். சிதம்பரம் திருக்கோயில் திருமூலரின் கொள்கைப்படியே அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகர் அமைத்த கோயிலிலும், வள்ளலார் அமைத்த சத்திய ஞானசபையிலும் இதே குறிப்பைக் காணமுடிகிறது. பிரணாயாம மாத்திரை அளவுகளான 16 மாத்திரை – பூரக அளவும், 64 மாத்திரை – கும்பக அளவும், 34 மாத்திரை ரேசக அளவும், தூண்கள் படிகள், சாளரங்கள் இவற்றால் குறிப்பிடப்பட்டுள்ளன.

திருக்கோயில் அமைப்பு முறையாகவும், பூஜை முறையாகவும் திருமூலரின் திருமந்திரத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.



## 23. அருள்மிகு பொன்மலை வேலாயுதசுவாமி திருக்கோயில்

### கிணத்துக்கடவு

கோவை - பொள்ளாச்சி சாலையில் 22 கி.மீ. தொலைவில் உள்ளது கிணத்துக்கடவு. இங்குள்ள மலைக்கோயிலில் வேலாயுதசுவாமி குடி கொண்டுள்ளார்.

தைப்பூசம், தேரோட்டம் போன்ற திருவிழா நாட்களில் மாவட்டத்தின் பல பகுதிகளிலிருந்து மக்கள் பெருந்திரளாக வந்து பொன்மலை வேலாயுதசுவாமியை தரிசித்துச் செல்கின்றனர்.

சந்திர கோபன்ன மன்றாடியார் புரவிபாளையம், கிணத்துக்கடவு முதலான கானல்காட்டுப்பெருவழிகளில் கோட்டை, அரண்மனை அமைத்து ஆட்சி செய்து வந்தார். ஆண்டுதோறும் அவர் தைப்பூசத்திருவிழாவிற்கு பழனி சென்று முருகனை வழிபட்டுசென்று வருவது வழக்கம். ஒருமுறை வையாபுரி நாட்டு பாளையக்காரர் கொடுத்த விருந்தில் கருத்துவேற்றுமை உருவாகி பழனி தண்டபாணியை தரிசிக்காமலேயே மனவேதனையுடன் திரும்பிவந்தார் மன்றாடியார். அடுத்த பல நாட்கள் பழனி முருகன் நினைவாகவே அன்ன ஆகாரமின்றி தவம் கிடந்தார்.





அப்போது அவரது கனவில் தோன்றிய பழனி ஆண்டவர். அவரது கோட்டை அருகிலேயே உள்ள பொன்மலையில் தனது பாதங்களை பதித்துள்ளதாகவும், அங்கேயே தன்னை வழிபடலாம் என்று கூறினாராம். இதை அடுத்து, சந்திரகோபன்ன மன்றாடியார் கிணத்துக்கடவு பொன்மலையில் முருகனின் பாதங்கள் பதிந்திருந்த இடத்தை தேடிக்கண்டுபிடித்து முருகப்பெருமானுக்கு திருக்கோயில் அமைத்து வழிபாடு நடத்த ஆரம்பித்தார். முருகனின் இருபாதங்கைகளையும் மலைக்கோயிலின் பின்புறம் காணலாம்.

மக்கள் பொன் அரளி மலர்களையும், இலைகளையும் பறித்து முருகனின் பாதங்களில் வைத்து பூசிக்கின்றனர். மலைக்கோயில் ஏறுவதற்கு படிக்கட்டுகள் உள்ளன. விநாயகரை வணங்கி மலைமீது ஏறவேண்டும். இடும்பன் சந்நிதியை வலம் வரும்போது வள்ளிசுனையைக் காணலாம். வேலாயுதசுவாமியின் கருவறையைச் சுற்றி அரிய கல்வெட்டுக்கள் உள்ளன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 - பகல் 12.00 மணி

மாலை 4.00 - இரவு 9.00 மணி

தொலைபேசி: 04259 - 242026




## 24. அருள்மிகு
## மாரியம்மன் திருக்கோயில்
### சூலக்கல்

பொள்ளாச்சிக்கு வடக்கே 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது சூலக்கல் மாரியம்மன் திருக்கோயில், கோவை-பொள்ளாச்சி சாலையில் கோவில்பாளையத்தி லிருந்து 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

சூலமும் கல்லும் இணைந்து "சூலக்கல்" என்று திருத்தலம் பெயர் கொண்டு சிறந்த பிரார்த்தனை பரிகாரத்தலமாக விளங்குகின்றது. மாரியம்மன் எல்லா நோய்களையும் அகற்றுபவளாக ஏவல், சூனியம் போன்ற தீவினைகளை பொடிப்பொடியாக்கும் அம்பிகையாக விளங்குகின்றாள்.

கேரள தேசத்து பக்தர்கள் பெருமளவில் வருகைதரும் திருக்கோயில். வைகாசி மாதத்தில் பத்து நாட்கள் தேர்த்திருவிழா மிகச்சிறப்பாக நடைபெறுகிறது.

 

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத்திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் 12.15 மணியளவில் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

இரண்டு கால பூசை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 – பகல் 1.00 மணி, பகல் 2.30 – இரவு 8.30 மணி

தொலைபேசி : 04259 – 246246

## சூரியவழிபாடு

காலைக் கடல் செல்வான் காட்டும் சிவமுருகன்

வேலை முக்கூறும் பகல் மேவுமால் – மாலைச் செல்வான்

வைகுசிவன் மேகம் வளர்சடை மேற்றிங்கள் தோய்

கமமுகில் நீராவி கங்கை மற்று.

காலைச்சூரியனை முருகப்பெருமானாகவும், பகல் சூரியனை திருமாலாகவும், மாலைச்சூரியனை சிவபெருமானா கவும், கூறுவது மரபு. இதனைத்தான் மேலே காணும், “பழம் பாடல்” குறிப்பிடுகிறது.

“வைகு நேரம்” என்பது மலையாள மொழியில் மாலை நேரம் என்று குறிப்பிடுவதாகும்.



## 25. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

பொள்ளாச்சி

பொள்ளாச்சி சந்தை என்று தமிழகத்திலேயே மிகப்பெரிய சந்தையாகக் கருதப்படும் புகழ்கொண்டது பொள்ளாச்சி நகரம். கோவை மாநகருக்குத் தெற்கே 40 கி.மீ.

"பொருள் புழக்கம் அதிகம் இருந்ததால்" பொருள் ஆட்சி என்று ஏற்பட்டு அதுவே பொள்ளாச்சி என மருவி விட்டதாகவும் கூறுவர்.

"கோடிப் பொருள்களைத் தேடிக்கொணர்ந்து குவித்துவைத்து

நாடி வணிகம் நலம்படச் செய்யும் நகரி துவாம்

ஈடில் வளம்சேர் பொள்ளாச்சி" – முருகன் மும்மணிக்கோவை.

''பொழில் வாய்ச்சி'' என்றும் இந்நகரம் முன்பு அழைக்கப்பட்டது. இதற்கு இந்நகரில் உள்ள சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் கல்வெட்டுக்களே சான்று ஆகும். பொழில்களுக்கிடையே உருவாகும் சிற்றூர்களை வாய்ச்சி என அழைத்தனர்.

மழை இல்லாத காலத்தில் கிணற்று நீரை இறைத்து விவசாயம் செய்தனர். இதுவே இறைச்சல் பொழில் வாய்ச்சி என்று ஆகியது. காலப்போக்கில் ‘‘பொழில் வாய்ச்சி’’ பொள்ளாச்சி ஆகி விட்டது.

ரோமானிய மன்னர்களான அகஸ்டஸ் (கி.மு.44) டைபீரியஸ் (கி.பி.14) காலத்து நாணயங்கள் இங்கே 150 ஆண்டுகளுக்கு முன்பு கிடைத்த புதைப் பொருட்கள், இந்நகரில் கடல் கடந்து அயல்நாட்டினர் வாணிகம் நடத்தியுள்ளனர் என்பதை உறுதிப்படுத்துகிறது.

**திருவகத்தீசுவரமுடையார்**

தற்போது இந்நகரில் மிகப்புகழ் வாய்ந்ததாக உள்ள சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் முன்பு சிவாலயமாக இருந்ததாக கருதப்படுகிறது. அங்கு உள்ள கருவறையின் தெற்கு சுவரில் கண்டறியப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. கொச்சி அரச பரம்பரையைச் சேர்ந்த மன்னர் காலத்து கல்வெட்டு ஒன்றில்,“ஐந்து சிவனடியார் களுக்கு அன்னம் பாலிக்க ஒரு அந்தணர் ஒப்புக்கொண்டு பணம் பெற்றுக்கொண்டதையும் இக்கோயிலின் பெயர் திருவகத் தீசுவரமுடையார் கோயில்” என்றும் குறிப்பு உள்ளது.

அது தவிர இக்கோயில் 700 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பதை வேறு சில கல்வெட்டுக்கள் உறுதிப்படுத்துகின்றன. கொங்குசோழ பரகேசரி வர்மன் விக்ரமன் சோழன் காலத்து கல்வெட்டு ஒன்று இந்த ஊர் “காவடிக்கா நாட்டில் உள்ள எறிச்சல் பொழில் வாய்ச்சி” என்றும் “முடித்தலை கொண்ட சோழ நல்லூர்” என்றும் அழைக்கப் பட்டதை கூறுகிறது. கி.பி. 1178-1216 வரை ஆட்சி புரிந்த சோழ அரசன் மூன்றாம் குலோத்துங்கன் “முடித்தலை கொண்ட சோழன்’’ என்ற பட்டபெயர் கொண்டவன் ஆவான். தெளிவுபடுத்துகின்றன.

முதலாம் கலிமூர்க்க விக்ரமசோழன், இரண்டாம் விக்ரமசோழன் ஆகியோரும் காவடிக்கா நாடு என்று அழைக்கப்பட்ட இப்பகுதியை ஆண்டு வந்துள்ளனர் என்பதை கல்வெட்டுகள் கூறுகின்றன. கிழக்கு நோக்கி அமைந்துள்ள சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் ஒரு திருச்சுற்றைக் கொண்டது. சுந்தரேசுவரர் என்று அழைக்கப்படும் ஈசுவரன் சந்நிதிக்கு முன் சிறிய இராஜகோபுரம் அமைந்துள்ளது. கருவறையின் முன்னே அர்த்த மண்டபம், மகா மண்டபம், சோபன மண்டபம், கல்யாண மண்டபம் ஆகியவை உள்ளன.

**சுப்பிரமணியசுவாமி**

கருவறையில் மயில்மீது அமர்ந்த கோலத்தில் நான்கு கரங்களோடு முருகப்பெருமான் காட்சி தருகிறார். வஜ்ராயுதத்தையும், சக்தி ஆயுதத்தையும் பின்கரங்களிலும், முன் இரு கரங்கள் அபயம் தந்து வரம் அளிக்கும் கோலத்தில் உள்ளார். ஒரே கல்லில் உருவான சிலையில் திருவாசி, மயில், முருகப்பெருமான் எல்லாம் வடிவமைக்கப்பட்டுள்ளது. சிற்பியின் திறமைக்கு எடுத்துக்காட்டு. முருகனுக்கு இருபுறமும் தேவியர் இருவர் நின்ற கோலத்தில் உள்ளனர். மயிலின் தலை இடப்புறம் உள்ளது.

**கல்சங்கிலிகள்**

முருகப்பெருமான் கருவறையை ஒட்டி தென்புறம் மீனாட்சி சுந்தரேசுவரர் சந்நதிகள் அமைந்துள்ளன. அவற்றின் எதிரே 24 தூண்கள் கொண்ட திருமண மண்டபம் உள்ளது. மேல்விதானத்தில் 12 ராசிகளைக் கொண்டு நடுவில் விரிந்த தாமரை மலரும் வடிக்கப்பட்டுள்ளன. அதனை ஒட்டி ஒரே கல்லில் உருவான யாளியும், அதன் வாயிலிருந்து 3 வளையங்கள் சங்கிலிகளாக ஒன்றோடு ஒன்று இணைந்து தொங்குவதைக் காணலாம்.

மகா மண்டபத்தில் தென்திசை நோக்கி ஆடல்வல்லான், சிவகாமி சந்நிதி உள்ளது. செப்புத் திருமேனிகள் அவை. அர்த்த மண்டபத்தின் நுழைவாசலின் இருபுறமும் சுந்தரபாண்டியன் அவனது துணைவியார் சிற்பங்கள் உள்ளன. மண்டபத்தின் தூண்களிலும் அரிய சிற்பங்கள் காணப்படுகின்றன.

பெரிய அளவிலான துவாரபாலர்கள் சிலைகள் பிரமிப்பூட்டுகின்றன. கருவறையின் சுவர்களில் கோஷ்ட தேவதைகள் இடம் பெற்றிருக்கின்றன. திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் பெரிய விநாயகர் சிலை ஒன்று உள்ளது. வடமேற்கு மூலையில் பைரவர் உள்ளார்.

காமிக ஆகமப்படி நான்கு கால வழிபாடுகள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் திருவிழாக்கள் நடைபெறுவது இத்திருக்கோயிலின் சிறப்பாகும். கந்த சஷ்டியை ஒட்டி நிகழும் சூரசம்காரம் மக்களை திரளாக ஈர்க்கும் பெரிய திருவிழாவாகும்.

முருகப்பெருமான் வெள்ளித்தேரில் பவனி வருவது தனிச்சிறப்பு.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

இரண்டு கால பூஜை நடைபெறுகிறது. இத் திருக்கோயிலுக்கு அருகிலேயே ஸ்ரீதேவி, பூதேவி உடன் உறை கரிவரதராஜப் பெருமாள் கோயில் உள்ளது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு – 8.00 மணி

தொலைபேசி: 04259 – 229054

மின் அஞ்சல் : subramaniyasamypoy@gmail.com



## 26. அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்

### பொள்ளாச்சி

பொள்ளாச்சி நகரின் புகழ்மிக்க மாரியம்மன் திருக்கோயில் சுப்பிரமணியசாமி திருக்கோயிலின் தென்புறம் அமைந்துள்ளது.

பொள்ளாச்சி நகரின் காவல் தேவதையாகப் போற்றப்படுகிறாள் அன்னை.

வடதிசை நோக்கியபடி அருள்பாலிக்கும் அன்னையின் தேர்த்திருவிழா பொள்ளாச்சிக்கே சிறப்புதருவதாகும். ஆயிரக்கணக்கான மக்கள் பூவோடு ஏந்தி வந்து அன்னைக்கு சமர்ப்பித்து வழிபாடு செய்வர். பங்குனி மாதம் இத்திருவிழா நடைபெறுகிறது.

வெள்ளிரதம்

வெள்ளிரதத்தில் அன்னை பவனி வருவதை காண திரளாக மக்கள் கூடுவர்.

பொள்ளாச்சி நகரில் இத்திருக்கோயிலைத் தவிர சீதாராம ஆஞ்சநேயர் திருக்கோயிலும், அழகு நாச்சியம்மன் திருக்கோயிலும், கன்னிகாபரமேஸ்வரி திருக்கோயிலும், மாகாளியம்மன் திருக்கோயிலும், பத்ரகாளியம்மன் திருக்கோயிலும் உள்ளன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04259 – 229065

மின் அஞ்சல்: mariammanpoy@gmail.com

## பறவைகள் தாங்கும் விமானம்

"பார் முடிக் கடல் கொண்ட ஞான்று
நின்பாதமெல்லாம் நாலஞ்சு புள்ளினம் ஏந்தின''
–திருநாவுக்கரசர்

சீர்காழியில் உமாமகேசுவரர் எழுந்தருளியுள்ள கட்டுமலையை இருபது பறவைகள் தாங்கி நிற்கின்றன. "தொல் பறவை சுமதோங்கும் திருக்கோயில்" என்று இதனைக் கூறுவர். ஊழிக்காலத்தில் கடல் பொங்கி உலகையே அழித்த போது இருபது பறவைகள் இங்கு வழிபட்டு உய்ந்ததாக சீர்காழி தலவரலாறு கூறுகிறது.



## 27. அருள்மிகு மாசாணியம்மன் திருக்கோயில்

### ஆனைமலை

தன்னைத் தஞ்சமடைபவர்களுக்கு அபயம் அருளும் மாசாணி அம்மன் திருக்கோயில், கோவை மாவட்டத்தில் மிகவும் பிரசித்தி பெற்றதாகும். பொள்ளாச்சியிலிருந்து 14 கி.மீ. தொலைவில் உள்ளது. சுற்றிலும் பச்சைப்பசேலென வயல்களும் தோப்புகளும் சூழ்ந்த இயற்கை எழிலோடு விளங்குவது ஆனைமலை சங்ககாலத்தில் "நன்னூர்" என்று அழைக்கப்பட்டதாம்.

17 அடி நீள உருவில், நின்ற நிலையிலோ அமர்ந்த நிலையிலோ, அல்லாமல் தரையில் படுத்த நிலையில், வானை நோக்கி பார்வையை செலுத்தியபடி அருள் பாலிக்கிறாள் மாசாணியம்மன். அம்மனின் திருஉருவம் மயான மண்ணில் உருவாக்கப்பட்டதாகும். நான்கு கரங்களுடன் நாகம், உடுக்கை, சூலம், தீச்சட்டி ஆகிவற்றை தனது கரங்களில் ஏந்தியபடி படுத்திருக்கிறாள் அம்மன்.






1800 ஆண்டுகளுக்கு முன்னர் நன்னன் என்ற பெயர் கொண்டு மூன்று அரசர்கள் ஆண்டுவந்தனர். அதில் இரண்டாவது நன்னன் ஆனைமலையை ஆண்டதால் இப்பகுதிக்கு நன்னனூர் என்று பெயர் அமைந்ததாக கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

இரண்டாம் நன்னனின் காவல்மரம் மாமரம். எனவே உப்பாற்றங்கரையில் அமைந்திருந்த மாந்தோப்புகளில் எவரும் மாங்கனிகளைப் பறிக்கக் கூடாது, ருசித்துப் பார்க்கக் கூடாதென ஆணையிட்டிருந்தான் நன்னன். தோப்பை அடுத்துள்ள ஆழியாற்றில் பெண்கள் நீராடச் செல்வது வழக்கம். தன் தோழிகளுடன் ஆற்றில் நீராட வந்த பெண்ணொருத்தி மாமரத்திலிருந்து இயற்கையாக நீரில் விழுந்து மிதந்துவந்த மாங்கனியை அறியாது எடுத்துச் சுவைத்து விட்டாள். இதனையறிந்த மன்னன் மாங்கனியைச் சுவைத்த அப்பெண்ணுக்கு மரண தண்டனை விதித்து விட்டான். தான் கனியைத் திருடவில்லை. ஆற்றில் மிதந்து வந்த கனியை அறியாது சுவைத்து விட்டதாகவும், முறையிட்டு கண்ணீர் விட்டு அழுதாள் அந்தப் பேதை. ஆனால் நன்னனின் மனம் சிறிதும் இரங்கவில்லை. தண்டனையை உடனே நிறைவேற்றிட ஆணை பிறப்பித்தான். ஆனைமலைத் தொடரில், “பிங்கொனம் பாறை” என்றழைக்கப்படும் பாறையில் தான் அவளுக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது.

அவள் பலியான இடத்தில், சமாதி அமைத்த மக்கள் அங்கே தெய்வீக சக்தி இருப்பதை உணர்ந்து கன்னிப் பெண்ணுக்கு உருவம் தந்து வழிபடத் துவங்கினர்.

கொங்கிளங் கோவர்கள், நன்னனின் நாட்டின் மீது படையெடுத்து, அவனை வெற்றிகொண்டதோடு, அரண்மனையையும், மாந்தோப்புக்களையும் அழித்தனர். நன்னன் நாட்டை விட்டே விரட்டியடிக்கப்பட்டான்.

நன்னனின் தவறான நீதியால் கொலையுண்ட அந்தப் பெண்தான் தெய்வமாக, மாசாணியம்மனாக உருவெடுத்தாள். மாங்கனிக்காக கொல்லப்பட்டவள், மாங்கனியம்மன், மாசாணியம்மனாகப் பெயர் பெற்றுவிட்டாள். படிப்படியாக நாளடைவில் மாசாணியம்மன் கொங்குநாட்டு மக்களின் கண்கண்ட தெய்வமாகிவிட்டாள்.

**அக்னி கிரீடமணிந்து....**

“தூங்கானை மாடம்” என்றழைக்கப்படும் கஜப்ருஷ்ட விமானத்தின் கீழே கருவறையில், மாசாணியம்மன் அக்னி கிரீடமணிந்து, ஆகாயத்தைப் பார்த்தபடி சயனித்திருக்கிறாள்.





அம்மனின் உக்ரம் தணிய, அவளை சாந்தப்படுத்த நெற்றியில் "ஸ்ரீ சக்ரம்" பொறித்து, அதில் "மஞ்சள் காப்பு" இட்டுள்ளனர். சுதையால் செய்யப்பட்ட திருமேனி என்பதால் தினசரி அபிகேம் கிடையாது. மாதம் ஒருநாள் மட்டும் பன்னீரால் அபிகேம் செய்து, அம்மனைக் குளிர்விக்கிறார்கள். பாதத்தடியில், கருங்கல்லினால் செய்யப்பட்ட அம்மனின் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. பூக்குழி திருவிழாவின் போது இவளை குளிர்ச்சிப்படுத்த வெண்ணைக்காப்பு இடுவர்.

**நீதிக்கு தலை வணங்கு!**

நீதியை நிலைநாட்டிட தெய்வமாகி விட்ட மாசாணியம்மனுக்கு எதிரில் எவரும் பொய் சொல்ல அஞ்சுவார்கள். அத்தனை உக்கிரத்துடன் உலகைக் காத்திட, தாயாக உருவாகியுள்ளாள் மாசாணியம்மன்.

தங்கள் உடமைகளை பறி கொடுத்தவர்கள், பிறரால் வஞ்சிக்கப்பட்டவர்கள், தங்களுக்கு நீதி வேண்டுமென்று கோரி, மாசாணியம்மன் கோயிலில் உள்ள "நீதிக்கல்லில்" சிவப்புமிளகாய் வற்றலை அரைத்துப் பூசிவிட்டு முறையிடுவார்கள். பக்தர்கள் முறையீட்டில் நியாயம் இருந்தால் அம்மன் நிச்சயம் தவறு செய்தவர்களை தண்டிப்பாள் என்பது மக்களின் அசையாத நம்பிக்கையாகும்.

96 நாட்களில், அதாவது மூன்று அமாவாசைக்குள், தவறு செய்தோரை மாசாணியம்மன் தண்டித்துவிடுவாள் என்பர். தங்கள் கோரிக்கையை நிறைவேற்றிய அம்மனுக்கு, அவளது மனதை குளிர்விக்க "எண்ணெய் காப்பு" செய்து மலர்களால் அர்ச்சனை செய்கிறார்கள்.

**கன்னிப்பெண்களின் கண்கண்ட தெய்வம்.**

கன்னிப்பெண்களுக்கு ஏற்படும் உடல் பிரச்சினை, வயிற்று நோய்கள் நீங்கிட அம்மனுக்கு பச்சிலை பிரசாதமாக வழங்கப்படுகிறது. செம்பருத்தி மலர் மாலை அம்மனுக்கு சிறப்பு!

**உதிரமாலை**

"மகப்பேறு" இல்லாதோருக்காகவும், தீராத வயிற்றுவலி நீங்கவும், மாசாணியம்மன் மூலஸ்தானத்தில் உதிரமாலை எனும் வழிபாடு நடைபெறகிறது. கோயிலில் அளிக்கப்படும் கருப்புக் கயிறு, அம்மனின் பாதத்தில் வைத்து பூசிக்கப்பட்டதாகும்.

பக்தர்கள் தரும் தேங்காய், அம்மனிடமே சமர்ப்பிக்கப் பட்டு, மறுநாள் காலையில் தான் உடைக்கப்படும்.

மாசாணியம்மனுக்கு நேர் எதிரே "மகாமுனி" அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். வெள்ளி, செவ்வாய், ஞாயிற்றுக்கிழமைகளில், ஏராளமான மக்கள் மாசாணியம்மனை தரிசிக்க வருகை தருவர். அமாவாசை நாட்களில் அவர்கள் எண்ணிக்கை பல ஆயிரங்களை எட்டும்.




### குண்டம் திருவிழா

16ம் நாள் சித்திரைத்தேர் வடம்பிடித்து நகர் வலம் வரும். தைமாதத்தில் அமாவாசையன்று மாசாணியம்மனின் திருவிழா துவங்கும். 14ம் நாள் இரவு மயான பூஜை நடைபெறும். 17ம் நாள் நடைபெறும். “குண்டம் திருவிழா” மிகவும் பிரசித்தி பெற்றது. அன்றும் காலை பக்தர்கள் குண்டத்தில் இறங்குவார்கள். மறுநாள் அம்மனுக்கு திருமஞ்சன நீராட்டுவிழா நடைபெறும். இரவு, மகா முனியப்பன் பூசையுடன் குண்டம் திருவிழா நிறைவுறும். மயானபூஜையின் போது எடுத்துவரப்பட்ட மயான மண் ஆற்றில் அப்போது கரைக்கப்படும்.

### எலுமிச்சம்பழ மாலை

அம்மனுக்கு நாலரை மீட்டர் நீளத்தில் சேலையும், எலுமிச்சம் பழமாலையும் சார்த்துவது சிறப்பாக கருதப் படுகிறது. தற்போது மிகப்பெரிய மகாமண்டபமும் 7 நிலை இராஜகோபுரமும் கட்டி முடிக்கப்பட்டு, குடமுழுக்கு நடந்தேறியுள்ளது.

### 108 தங்கமலர் அர்ச்சனை

பக்தர்கள் பிரார்த்தனைக்கேற்ப அம்மனுக்கு 108 தங்க மலர்களால் அர்ச்சனை செய்விக்கப்படும்



**தங்கத்தேர்**

மாசாணியம்மன் திருக்கோயில், அழகிய தங்கரதம் ஒன்று செய்யப்பட்டு அம்மன் திருவுலா வந்திட வகை செய்யப்பட்டுள்ளது. அதற்குரிய கட்டணம் ரூ.750/-

**அபிகேம்**

நாள் தோறும் நடைபெறும் கால பூஜைகளில், பக்தர்கள் ரூ.750/- செலுத்தி அபிகேத் திட்டத்தில் கலந்து கொள்ளலாம்.

**அன்னதானம்:** மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**தினசரி வழிபாடு** காலை 6.00 மணி – சந்நிதி திறப்பு

காலை 6.30 மணி – அபிகேம் அலங்காரம்

மதியம் 11.30 மணி – உச்சிகால பூஜை

மாலை 6.30 மணி – சாயரட்சை

இரவு 8.00 மணி – சந்நிதி திருகாப்பு

அமாவாசைக்கு முன்தினம் இரவு முழுவதும் திருக்கோயில் திறந்திருக்கும்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – இரவு – 8.00 மணி

தொலைபேசி : 04253 - 282337

மின் அஞ்சல் : masaniamman@tnhrce.org

இணையதளம் : www.anaimalaimasaniamman.org





## 28. அருள்மிகு ஆஞ்சநேயசுவாமி திருக்கோயில்

பாலாற்றங்கரை

"பாலாற்றங்கரை" பொள்ளாச்சிக்குத் தென்மேற்கில் 12 கி.மீ. தொலைவில் உள்ளது. இயற்கை எழிலுக்குப் பெயர் பெற்றது. பொள்ளாச்சிக்குப் பெருமை சேர்ப்பவை அதன் மண்ணவளமும், அதற்கு துணை நிற்கும் ஆழியாறும் பாலாறும் ஆகும்.

கடல்போல நீர் பெருகி ஓடுவதால் ஆழியாறு என்றும், நீரின் சுவை பாலை ஒத்து இருப்பதால் பாலாறு என்றும் அழைக்கப்பட்டிருக்கும்.

வால்பாறை செல்லும் சாலையில் சமத்தூர் நான்கு சாலை சந்திப்பைக் கடந்ததும், 1 கி.மீ தொலைவில் வலப்புறம் திருக்கோவிலின் "வளைவு" நம்மை எதிர்கொண்டழைக்கிறது.

தொலைவிலிருந்தே, பாலாற்றின் நீரில் "தெப்பம்" போல் அழகாகக் காட்சியளிக்கிறது திருக்கோயில்.



சிற்றாறை கடந்து செல்ல பாதையும் அமைக்கப்பட்டு, இருபுறமும் சங்கிலிகள் சேர்க்கப்பட்டுள்ளன. பக்தர்கள் அச்சமின்றி ஆற்றைக் கடந்திட, பாதையின் நடுவே, இரும்புக் குழாய்களினால் செய்யப்பட்ட "கிராதி" யும் உள்ளது.

**தென்திசை நோக்கி**

தென் இலங்கையில் சீதாபிராட்டியை தரிசித்துவிட்டு, சூடாமணியுடன் ராமபிரானிடம் திரும்பி வந்தபோது, முதலில் அவரை வணங்காமல், தென்திசை நோக்கித் தான் வணங்கினான் சொல்லின் செல்வன் ஆஞ்சநேயன். அதனை உணர்த்தும் வகையிலே, பாலாற்றங்கரையில் அமைந்துள்ள திருக்கோயிலிலும் ஆஞ்சநேயசுவாமி தெற்கு திசை நோக்கியபடி அருள்பாலிக்கிறார்.

**பாறையிலே அமைந்தசுவாமி வாயுபுத்திரன் வடிவம்**

ஆற்றின் கரையில் பாறையில் இயற்கையாகவே அமைந்துள்ளது ஆஞ்சநேயசுவாமியின் திருவுருவம். தலைக்கு மேலே வந்து கரத்தைத் தூக்கியபடி "அஞ்சேல்" என அபயம் அளித்திடும் கோலம்.



தன்னைப் பணிவோரின் துயர்களைத் தூள்தூளக்கிவிடும் கதாயுதம் இடதுகரத்தில், வாலை உயர்த்தித் தூக்கியபடி மணியோசையையும் எழுப்பிய வண்ணம், சீதாதேவியிடமிருந்து பெற்ற சூடாமணியை வலது தோளில் தொங்கும் துணியில் கொண்டபடி வலதுகாலை முன்வைத்து காட்சி தருகிறார்.

எப்படி இங்கே இந்த சிலைவடிவம் தரையில், பாறையிலே அமைந்தது? "வானவீதியில்" அனுமன் வரும்போது, இம்மலையின் குறுக்கே வர நேர்ந்ததாம். இராமபிரானின் பாதச்சுவடுகளை இங்கே கண்டபோது, அவற்றை உற்றுநோக்கிட கீழே குனிந்து பார்க்க, அனுமனின் நிழலே, பாறையில் சிலை வடிவமானது என்கின்றனர் அனுமன் தாசர்கள்.

அந்தச் சிலை வடிவில் பின்னே ஒரு அழகிய கோயிலை எழுப்பி, ராமரின் பாதங்களையும், ஒரு ஐந்தடி உயர ஆஞ்ச நேயசுவாமி சிலையையும் எழுப்பினர்.

குமரி மாவட்டத்தில், "மருந்து வாழ்மலை என்று ஒரு மலையின் ஒரு துண்டு அங்கு சிதறி விழுந்ததாகக் கூறுவர். அங்கிருந்து எடுக்கப்பட்ட பாறையில் உருவானதே மூலவர் சிலை. ஆஞ்சநேய சுவாமியின் முகத்தில் தவழும் புன்சிரிப்பும், மகத்துவமும் தொனித்திட, வலதுகரத்தை உயர்த்தியபடி, கதாயுதத்தை இடது கரத்தில் ஏந்தியபடி காட்சி தருகிறார். வானில் எழும் விசைபோல வாலை உயர்த்தியபடி சேவை தருகிறார். வலது தோளில் "சூடாமணி" துணியில் உள்ளது.

**ராமர் பாதம்**

ராமபிரானின் பாதச்சுவடுகள் தானே அனுமனை பாலாற்றங்கரைக்கு இட்டு வந்தன எனவே அழகிய ராமர் பாதம் விமானத்துடன் கூடிய மண்டபத்தில், பின்புறம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. ஆஞ்சநேயசுவாமியின் இடதுபுறம், விநாயகப் பெருமான் உள்ளார்.

உச்சிக்காலத்தில், சிறப்பு திருமஞ்சனம் நடைபெறுகிறது. சனிக்கிழமைகளில் விழாக்கோலம் காண்கிறது பாலாற்றங்கரை. "வெள்ளிக்கவசம்" அணிந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறார் ஆஞ்சநேயர்.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.30 – பகல் 1.00 மணி

மாலை 3.00 – இரவு 7.00 மணி

**தினசரி வழிபாடு**

தினசரி பூஜையில் விமானத்தின் அடிப்பகுதியிலிருந்து உச்சி கலசம் வரையிலுள்ள பகுதிகளின் பெயர்கள் வரிசையாகக் கூறப்பட்டு பூஜை செய்ய வேண்டுமென்று பூஜை வழிபாட்டு நூல்கள் கூறுகின்றன.

இதன்படி விமானத்தின் அங்கங்களான அதிஷ்டானம், உபபீடம், கமலம், பண்டிகை, கால்கள், கோட்டம், கும்பபஞ்சரம், மகரதோரணம், கபோதவரி, தளம், நிலை, கிரீவம், சிகரம், கலசம் என்று உச்சிவரை கூறப்படுகிறது.



## 29. அருள்மிகு அம்மணீசுவரர் திருக்கோயில்

மஞ்சநாயக்கனூர்

பொள்ளாச்சியைச் சுற்றிலும், ஏறக்குறைய பத்து கோயில்களில் ஈசுவரன், அம்மணீசுவரர் என்று அழைக்கப்படுகிறார். தேவனாம்பாளையம், தேவாம்பதி, குரும்பபாளையம், ஆவலப்பட்டி, கஞ்சம்பப்டி, சங்கம்பாளையம், சீலக்கம்பட்டி, ஜல்லிப்பட்டி மற்றும் மஞ்சநாயக்கனூர், ஆனைமலை ஆகிய ஊர்களே அவை. திருமூர்த்திமலையைப் போலவே மஞ்சநாயக்கனூரில் மும்மூர்த்திகள் கோயில் உள்ளது.

பொள்ளாச்சிக்கு தென்மேற்கில் 5 கி.மீ. தொலைவில் உள்ள "அம்மணீசுவரர் திருக்கோயில்" தற்போது மும்மூர்த்தி தலமாக உருவாகிவிட்டது. பண்டைய காலத்தில் "நிலப்புற்றீசுவரர்" என்று இவர் அழைக்கப்பட்டார்.

தற்போது அழகிய கருவறையில், கருவறையின் பீடம் பிரம்மஸ்தானத்திலும், கருவறை விமானம் விஷ்ணு ஸ்தானத்திலும், ஆட்சி பீடமான மையத்தில் தியான நிலையில் சிவபெருமானும் குடிகொண்டுள்ளார்.

நான்கு தலைகளுடன் பிரம்மா வலதுபுறமும், சங்குசக்கரமேந்தியபடி இடப்புறம் திருமாலும், மையத்தில் மோனநிலையிலும் சிவபெருமான் தியானம் செய்த கோலத்தில் காட்சி தருகின்றனர்.

கொங்கு மண்டலத்தில், திருமூர்த்திமலை, கொடுமுடி ஆகியவற்றோடு மூன்றாவது மும்மூர்த்தித் தலமாகத் திகழ்கிறது மஞ்சநாயக்கனூர். 500 ஆண்டுகளுக்கு முற்பட்ட திருக்கோயில் இது. நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

## ஆகமங்கள் கூறும் மண்டபங்கள்

ஆகமங்களிலும், வழிபாட்டு நெறிமுறைகளிலும் அநேக வரிசையான மண்டபங்கள் சொல்லப்பட்டுள்ளன. அவை ஸ்நான மண்டபம், கேய மண்டபம், வாத்ய மண்டபம், முக மண்டபம், கோபான மண்டபம், கோபுரத் துவார மண்டபம், ஆஸ்தான மண்டபம், யாகசாலை மண்டபம், புஷ்ப மண்டபம், பூஜை மண்டபம், விஜய மண்டபம், பிரதட்சண மண்டபம், உத்யான மண்டபம், ஸ்ரீ வள்ளி மண்டபம், ஸ்ரீ சர்ண மண்டபம், கிருஷ்ண கந்த மண்டபம், ஜலகிரீடா மண்டபம், 64 கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரங்கால் மண்டபம், கந்த மண்டபம், சுவர்ண மண்டபம், அபிகே மண்டபம், அலங்கார மண்டபம், வசந்த மண்டபம், உபசார மண்டபம், ஊஞ்சல் மண்டபம், அத்யயன மண்டபம், ஆகம மண்டபம், புராண மண்டபம், தீட்சா மண்டபம், வீணா மண்டபம், துவஜாரோகண மண்டபம், ரதா ரோகண மண்டபம், (தேரடி மண்டபம்) மதுரை கிழக்கு சித்திரை வீதியில், அம்மன் சந்நிதிக்கு எதிரே “நகரா மண்டபம்” என்று ஒன்று உள்ளது. விழாக்காலத்தில் மேலே வாத்தியக் குழுவினர் அமர்ந்து இசைப்பதற்கு உருவான மண்டபம்.



## 30. அருள்மிகு அழகுதிருமலைராயப்பெருமாள் திருக்கோயில்

அர்த்தநாரிபாளையம்

பொள்ளாச்சிக்குத் தென்கிழக்கே, சமத்தூர் நால்ரோடு சந்திப்பிலிருந்து இடதுபுறம் எரிசினம்பட்டி, தளி செல்லும் பாதையில் 4 கி.மீ. சென்றபின் அர்த்தநாரிபாளையத்தை அடையலாம். அங்கிருந்து தெற்கே 1 கி.மீ. உள்ளடங்கிச் சென்று மலையடி வாரத்தை அடையலாம்.

மலைமேல் உள்ளது அழகு திருமலையராயப் பெருமாள் கோயில், ஏறுவதற்கு வசதியாகப் படிகள் அமைக்கப்பட்டுள்ளன. குறுக்கே உருண்டையான பாறை ஒன்று நிற்கிறது. அதனைச் சுற்றிச் சென்று மீண்டும் படிகள் வழியே மேலே செல்ல வேண்டியுள்ளது. காலை நேரத்தில் ஏறினால் சுலபமாகப் படியேறலாம்.

திருவல்லிக்கேணி “பார்த்தசாரதி” போல மீசையுடன் காட்சி தருகிறார். “அழகு திருமலைராயப் பெருமாள்”

திருக்கோயில் பட்டாசாரியாருடன் தொடர்புகொண்டு, மேலே தரிசனம் செய்யச்செல்வது நலம்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 9.00 மணி – பகல் 12.00 மணி

ᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛ

**பசுபதி**

கொங்கு நாட்டில் உள்ள அனைத்து சிவாலயங்களிலும் காமதேனு சிவனை வழிபட்டு வழிபெற்றது. இதனை உணர்த்தும் வகையில், இவ்வட்டாரத்திலுள்ள கோயில்களின் முன்னேயுள்ள தீபத்தம்பத்தின் அடிப்படைப்பகுதியில், கிழக்கு நோக்கியவாறு "பசுபதீசுவரர்" வடிவங்களை அமைத்துள்ளனர். சில தலங்களில் பசு சிவலிங்கத்தின் மீது பாலைப்பொழிந்து அதனை நாவினால் வருடும் பாவனையாக வெள்ளியால் செய்து வைத்துள்ளதையும் காணலாம். (எ.கா) பேரூர் பட்டீசுவரசாமி திருக்கோயில்

ᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛᘚᘛ




## 31. அருள்மிகு
## வேட்டைக்கார சுவாமி திருக்கோயில்
### வேட்டைக்காரன்புதூர்

ஆனைமலையையடுத்து 3 கி.மீ. தொலைவில் உள்ளது வேட்டைக்காரன்புதூர். இங்கே, வேட்டைக்காரசுவாமி திருக்கோயில் உள்ளது.

வேட்டைக்காரசுவாமி திருக்கோயிலின் முகப்பில், யானை மீது அமர்ந்தபடி வேட்டைக்காரசுவாமி சுதை உருவம் உள்ளது. உள்ளே பலகை சிற்பமாக வேடடைக்காரசுவாமி உள்ளார். ஒரு கால பூஜை நடைபெறுகிறது.

இதே ஊரில் உள்ள கரிவரதராஜப் பெருமாள்சுவாமி திருக்கோயிலில் 2 கால வழிபாடுகள் நடைபெறுகிறன்றன.





## 32. அருள்மிகு
## சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்
### வால்பாறை

தேயிலைத் தோட்டங்கள் நிறைந்த மலைப்பகுதியாகும் வால்பாறை. பொள்ளாச்சிக்குத் தெற்கே 60 கி.மீ. ஆழியாறு அணைவரை 20 கி.மீ. அதன்பிறகு 40 கி.மீ. தொலைதூரம் 40 கொண்டை ஊசி வளைவுகளைக் கடந்து மேலே செல்ல வேண்டும்.

சுற்றுலாப் பயணத்திற்கு, மிகவும் ஏற்ற பகுதியாகும். எங்கு காணினும் மலைத்தொடர்கள், சிற்றாறுகள், நீர்வீழ்ச்சிகள், தேயிலைத் தோட்டங்கள் செல்லும் பாதையில் "குரங்கு நீர்வீழ்ச்சி" உள்ளது. "புலிகள் பாதுகாப்பு வனப்பகுதியைக்" கடந்து செல்கிறோம்.

தோட்டத்தொழிலாளர்களே அதிகம் நிறைந்த ஊர் வால்பாறை. "குன்றிருக்குமிடமெல்லாம் குமரனுக்குக் கோயில்" என்பதை மெய்ப்பிக்க அழகிய சுப்பிரமணியசுவாமி கோயிலை எழுப்பியுள்ளனர்.

நகரின் மையப்பகுதியில் அமைந்த கோயில். அழகிய மகாமண்டபமும், முருகன் சந்நிதியின் பின்புறம் ஈசுவரன் சந்நிதியும் கொண்டது. கருவறை விமானம் உயர்ந்து தொலைதூரத்திலிருந்தே தெரிகிறது.

நாள்தோறும் மூன்றுகால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி



## 33. அருள்மிகு சேனைகல்வராயப்பெருமாள் திருக்கோயில்

### ஆனைமலை

கோவை மாவட்டம், பொள்ளாச்சியிலிருந்து சுமார் 14 கி.மீ. தொலைவில் உள்ள ஆனைமலையின் மேற்கு சாரலில் உடைய குளம் என்னும் பகுதியில் அமைந்துள்ள குன்றின் மீது திருக்கோயில் அமைந்துள்ளது. பதினேழாம் நூற்றாண்டுக்கு முன் அமையப்பெற்ற திருக்கோயில் இது.

720 திருப்படிகளுடன் காண்போர் வியக்கும் பச்சைமாமலை சூழும்பகுதியில் அமைந்துள்ளது இத்திருக்கோயில். சேனைகளைப் பாதுகாக்க படைவீரர்கள் காக்கும் கடவுளாகிய திருமாலை வழிபட்டதால் சேனை கல்வராயப்பெருமாள் என்று அழைக்கப்படுகிறார். திருக்கோயிலின் முன்பு கருங்கல்லினால் ஆன தீபத்தம்பமும், நான்கு கால் மண்டபமும் உள்ளன.

திப்புசுல்தான் கொங்கு நாட்டை வசப்படுத்திய போது, ஆங்கிலேயரை எதிர்த்திட இந்த குன்றின்மேல் கோட்டை ஒன்றைக் கட்டி கண்காணிப்பு கோபுரமாக பயன்படுத்தியதாக கூறப்படுகிறது.

அருள்மிகு சேனைகல்வராயப்பெருமாள் ஸ்ரீ தேவி, பூதேவியரோடு காட்சி தந்து அருள்பாலிக்கிறார். இத்திருக்கோயிலில் விநாயகப்பெருமானுக்கு தனி சந்நிதி உள்ளது. இறைவனே மலை உருவில் காட்சி அளித்து அருள்புரிவதாக இப்பகுதி மக்கள் நம்புகின்றனர்.

நாள்தோறும் ஒரு கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

## கம்பத்திளையனார்

திருவண்ணாமலையார் ஆலயத்தில் சிவகங்கைத் தீர்த்தக் கரையில் 16 கால் மண்டபம் உள்ளது. அதன் ஈசான மூலையிலுள்ள கல்தூணில் முருகப்பெருமான் அருணகிரி நாதரின் வேண்டுகோளின்படி, அரசர் முதல் அனைத்து மக்களும் காணக்காட்சிதந்து, அதன்பிறகு கல் திருமேனியாக எழுந்தருளியதாக வரலாறு கூறுகிறது. அந்தத்தூணை மையப்படுத்தி கருவறை, மகாமண்டபம், ஆகியவற்றை அமைத்தனர். இதுவே தற்போது “கம்பத்திளையனார்” சந்நிதி என்று தனிக்கோயில் ஆனது.



## 34. அருள்மிகு ஆதீசுவரர் திருக்கோயில்

பெரியகளந்தை

பொள்ளாச்சிக்கு வடகிழக்கே 24 கி.மீ. தொலைவில் கிணத்துக்கடவு – காட்டம்பட்டி சாலையில் உள்ளது பெரியகளந்தை. கோவையிலிருந்து வடசித்தூர் சென்று, அங்கிருந்து காட்டம்பட்டி சாலையில் சென்று பெரியகளந்தையை அடையலாம். பொள்ளாச்சி – பல்லடம் சாலை வழியே செஞ்சேரிமலை பிரிவிலிருந்தும் பெரியகளந்தை செல்லலாம்.

கி.பி.964 – 969ல் சோழப் பேரரசன் இரண்டாம் ஆதித்த சோழன் காலத்தில், இந்தக்கோயில் கட்டப்பட்டதாக கல்வெட்டுக்கள் கூறுகின்றனர். தொடர்ந்து ஆதித்த கரிகாலன், வீர ராஜேந்திர சோழன், திருபுவன சக்ரவர்த்தி, விக்ரமவீரகேசரி ஜடாவர்மசுந்தரபாண்டியன் காலத்திலும் திருக்கோயில் திருப்பணிகள் செய்விக்கப்பட்டு விரிவடைந்துள்ளது.




மூலவர் திருமேனி உளிபடாத சுயம்பு லிங்கம் ஆகும். “ஆதித்தேசுவர முடையான்” என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

**ஆவுடைநாயகி**

அம்பிகை, ஆவுடைநாயகி ஈசுவரனின் வலதுபுறம், பசுவுடன் கூடியவளாக எழுந்தருளியுள்ளாள். நான்கு கரங்களுடன், பாசம் அங்குசத்துடன் அபய ஹஸ்தமாகவும், கீழ் வலது கரத்தை பசுவின் தலைமீது வைத்து வருடும் பாவனையில் உள்ளாள்.

பசுவை அணைத்தவாறு அன்னை “கோமதி” யாகக் காட்சி தருவதோடு, “ஆ” வை உடன் கொண்டதால், ஆவுடையாள் என்றும் பெயர் கொண்டுள்ளாள். தமிழ்நாட்டில் வேறு எந்தத் திருத்தலத்திலும் இல்லாத அமைப்பு இது.

ஐந்து இலை கொண்ட வில்வமரமே தலமரம் ஆகும். நான்முகன் உருவாக்கிய பிரம்மதீர்த்தம் அக்னி மூலையில் உள்ளது. ராமபிரான் இத்தலத்து இறைவனை பூசித்ததாக கூறப்படுகிறது. அதற்கு ஆதாரமாக இக்கிராமத்தில் முனிவர்களோடு கூடிய ராமபிரான் சிலை உள்ளது.

ஆதித்த சோழன் பெருமைக்கு விளக்கமாய் இந்தக்கோயில் அமைந்துள்ளது. கி.பி.887ல் ஆதித்த சோழன் கொங்குநாட்டை வென்று இங்கிருந்து ஏராளமான பொன்கொண்டு சென்று தில்லை நடராசப் பெருமான் கோயிலுக்கு பொன் வேய்ந்ததாகக் கூறுவர்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 – 11.00 மணி, மாலை 4.00 – 8.00 மணி



## 35. அருள்மிகு நீதீசுவரர் திருக்கோயில்

பெரியநெகமம்

பொள்ளாச்சியிலிருந்து வடகிழக்கே 15 கி.மீ. தொலைவில் பெரிய நெகமம் உள்ளது. இத்தலத்தில் நீதீசுவரர் என்னும் திருநாமத்துடன் இறைவன் எழுந்தருளியுள்ளார். அன்னை காமாட்சி அம்மன் சந்நிதியும், பரிவார தேவதைகள் சந்நிதியும் உள்ளன. நாள்தோறும் இரண்டுகால வழிபாடுகள் நடைபெறுகின்றன.

கன்னிகாபரமேஸ்வரி, பத்திரகாளியம்மன், காத்தவராயப் பெருமாள் கோயில்கள் அருகில் உள்ளன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

### நெல்லிமரம்

நெல்லிமரம் திருமாலின் அருள்பெற்றது. “அரிபலம்” என்று நெல்லிக்கனிக்கு பெயர். நெல்லிமரம் இருக்குமிடத்தில் திருமால் திருமகளுடன் தங்குகிறார். திருத்தங்கல் தலத்தின் தல மரம் “நெல்லி” நெல்லிமரம் உள்ள இடத்தில் தீவினை, ஏவல், சூனியம் ஏதும் நெருங்காது.



## 36. அருள்மிகு மந்திரகிரிவேலாயுதசுவாமி திருக்கோயில்

செஞ்சேரிமலை

சூலூருக்கு தென்மேற்கே 20 கி.மீ. தொலைவில் உள்ளது செஞ்சேரி மலை. மந்திரகிரி, தென்சேரிகிரி என்றும் அழைப்பர். அருகிலேயே சக்திமலை, திருமால் மலை, பிரம்மா மலை என 3 மலைகள் உள்ளன.

கடல் மட்டத்திலிருந்து 1356 அடி உயரத்தில் திருக்கோயில் அமைந்துள்ளது. 250 படிகளைக் கடந்தும் மலைப்பாதை வழியேயும் மலைக்கோயிலைச் சென்றடையலாம்.

ஆலயத்திற்கு வடக்கே “ஞானதீர்த்தம்” உள்ளது. அது தவிர சயிலோக தீர்த்தம், சரஸ்வதி தீர்த்தம், லட்சுமி தீர்த்தம், பிரம்மதீர்த்தம், வள்ளி தீர்த்தம், காணார் சுனை என்று ஆறு தீர்த்தங்களும் உள்ளன. தலமரம் – கருநொச்சி

**மந்திரகிரி**

சூரபதுமனின் மாயங்களை அழிக்கும் மந்திரங்களை முருகப்பெருமான் தன் தந்தையிடம் இத்திருத்தலத்தில் பெற்றதால், ‘‘மந்திரகிரி’’ என்று பெயர் பெற்றது. திருப்பரங்குன்றத்தில் முருகப்பெருமான் மணமுடித்துத் திரும்பும் வழியில் இம்மலையில் தங்கியதாக ஐதீகம். தலவரலாறு 255 செய்யுட்களாக அமைந்தது. அருணகிரிநாதர் திருப்புகழ் கொண்ட தலம்.

சிவ பெருமானிடம் மந்திர உபதேசம் பெற்றவர் என்பதால் இத்தலத்தில் அருளும் வேலாயுதரை “மந்திரமுருகன்” என்றனர். அதுவே காலப்போக்கில் மந்திரிமுருகன், மந்திரியப்பன் என்றும் அழைக்கப்படுகிறது. இப்பகுதியில் பிறக்கும் குழந்தைகளுக்கு “மந்திராசலம்” என்றும், ‘‘மந்திரி’’ என்றும் பெயர் வைப்பது வழக்கம் ஆகியுள்ளது. முருகனுக்கு அருள்புரிவதற்காக தென்திசை வந்து சிவபெருமான் வீற்றிருப்பதால் “தென்சேரிகிரி” என்றும் பெயர் ஏற்பட்டது. வேலாயுதப் பெருமான் பன்னிருகரங்களுடன் காட்சி தருகிறார். சேவல் கொடியைத் தாங்கி நின்ற போதிலும், இடது கரத்தில் சேவலையும் கொண்டுள்ளார். சூரனை அடக்கி அவனை சேவலாக தனது பிடிக்குள் வைத்திருப்பதைக் காட்டும் கோலம். மயில்வாகனம் வடக்கு நோக்கி உள்ளது. இருபுறமும் வள்ளி – தெய்வானை உள்ளனர். முருகன் இத்தலத்தில் தனது பெற்றோர்களை வணங்கியபின் போரில் வெற்றி கண்டார் என்கிறது தலவரலாறு.

உற்சவர் முத்துக்குமாரர், வள்ளி, தேவயானையுடன் பத்மபீடத்தில் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். கைலாசநாதர், பெரியநாயகி, நடராசப் பெருமான், திருமால் தனது வலது கரத்தில் சிவலிங்கத்தை வைத்தபடி காட்சி தருவதும் ஓர் சிறப்பு ஆகும்.

நவக்கிரக தோம் உள்ளவர்கள், குறிப்பாக செவ்வாய் தோம் உள்ளவர்கள் செவ்வரளி மாலை சாத்தி மந்திராசலத்தை வழிபடுவர். "பூக்கேட்டல்" எனும் சடங்கு இத் திருக்கோயிலில் நடைபெறுகிறது. திருமணம் நிச்சயித்திட, புதிய தொழில் துவங்க முருகன் அருளை வேண்டும் வழிபாடு இது.

தை மாதம் 11 நாட்கள் பெருவிழாவோடு, வைகாசி விசாகம், திருக்கார்த்திகை, கந்தசஷ்டி, பங்குனி உத்திரம், சிவராத்திரி மாசிமகம் ஆகியவை சிறப்பான விழாக்காலங்கள் ஆகும்.

நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 12.30 மணி

மாலை 4.30 மணி – இரவு 7.30 மணி

தொலைபேசி : 04255 – 2666515

## மேற்கில் நரசிம்மர்

முப்புரமெரித்திட சிவ பெருமான் புறப்பட்டபோது, அவரது கரத்தில் அம்பாகத் திகழ்ந்தவர் திருமால். உக்ர நரசிம்மராக ''நரசிங்காஸ்திரம்'' என்ற உருவில் உள்ளார். இதனை உணர்த்திடவே, சிவாலயங்களின் விமானங்களில் மேற்குப் பகுதியில் நரசிம்மரின் திருவுருவம் அமைக்கப்படுகிறது.



## 37. அருள்மிகு
## உலகளந்த பெருமாள் திருக்கோயில்

### சிங்காநல்லூர்

கோவை மாநகரிலிருந்து கிழக்கே 10 கி.மீ. தொலைவில் திருச்சி சாலையில் அமைந்துள்ளது சிங்காநல்லூர். கொங்கு நாட்டின் பழமைவாய்ந்த கோயில்களில் ஒன்றான இக்கோயில் ஊரின் வடக்கே அமைந்துள்ளது. பொதுவாக கிழக்கு நோக்கியே இருக்கும் கோயில்களில் இருந்து மாறுபட்டு வடக்கு நோக்கி இந்தக் கோயில் அமைந்துள்ளது.

கொங்கு சோழர் காலத்தில் அமைந்த இந்த கோயிலில் மூலவர் சிலை உலோகத்திருமேனியாக உள்ளது. அந்நியர் படையெடுப்பின் போது வேறு இடத்திலிருந்து இந்த சிலை கொண்டுவரப் பட்டிருக்க வேண்டும் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

கோயிலின் நுழைவாயிலில் பிரசன்ன மகா கணபதி வாயு மூலையில் எழுந்தருளியுள்ளார். தசாவதாரத் தத்துவங்களில் மூலமான வராக உலகளந்த பெருமாள் திகழ்கிறார். எட்டுக் கரங்களுடன் ஆயுதங்கள் ஏந்தியபடி மகாபலி சக்கரவர்த்திக்கு விசுவரூப தரிசனம் அளிக்கும் பாவனையில் மூலவர் சிலை உள்ளது.




ஆவணி மாதம் திருவோணத்தின் போது 10 நாள் வாமன ஜெயந்தி விழாவும், மார்கழியில் 21 நாட்கள் நடைபெறும் வைகுண்ட ஏகாதசி விழாவும் மிகச்சிறப்பு வாய்ந்தவை. இக்கோயிலுக்கு அருகிலேயே செல்லாண்டியம்மன் திருக்கோயிலும் பெரியாண்டவர் திருக்கோயிலும் உள்ளன.

காஞ்சிபுரம், திருக்கோவிலூர் சீர்காழி, சிங்காநல்லூர் ஆகிய இடங்களில் மட்டுமே உலகளந்த பெருமாளுக்கு ஆலயம் உள்ளது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 11.30 மணி

மாலை 5.00 மணி – இரவு 7.30 மணி






## 38. அருள்மிகு வைத்தீசுவரர் திருக்கோயில்

### சூலூர்

கோவை மாநகருக்கு கிழக்கே திருச்சி சாலையில் 20.கி.மீ. தொலைவில் உள்ளது சூலூர்.

இங்கு தையல்நாயகி உடன் உறை வைத்தீசுவரர் திருக்கோயிலும், அருகிலேயே திருவேங்கடநாதப் பெருமாள் திருக்கோயிலும் உள்ளன. ஏரியை எதிர்நோக்கி அமைந்துள்ளது வைத்தீசுவரர் திருக்கோயில்.

கொடிமரம், பிரதோ நந்தி, திருச்சுற்று அனைத்தும் சிவாகமவிதிகள்படி அமைந்துள்ள திருக்கோயில் இது. மூலவர் வைத்தீசுவரர் சுயம்பு மூர்த்தியாக எழுந்தருளியுள்ளார். அன்னை தையல்நாயகி தனி சந்நிதி கொண்டுள்ளார்.

பிரதோ வழிபாடு, சஷ்டி ஆகியவை சிறப்பாக நடைபெறுகின்றன.

நாள்தோறும் ஒருகால பூஜை நடைபெறுகிறது.

## 39. அருள்மிகு திருவேங்கடநாதபெருமாள் திருக்கோயில்

சூலூர்

சூலூர் நகருக்கு மேலும் எழில் கூட்டுவது அருள்மிகு திருவேங்கடநாதபெருமாள் திருக்கோயில் ஆகும். திருவேங்கடநாத பெருமாள் திருக்கோயில் நுழைவாசலில் 10 அடி உயரத்தில் கருடாழ்வார், ஆஞ்சநேயர் சுதை சிற்பங்கள் உள்ளன. மகா மண்டபத்தில் தசாவதார சிற்பங்களும், திருப்பதி ஸ்ரீநிவாசர் சுதை சிற்பமும் அழகூட்டுகின்றன. திருச்சுற்று வைகுண்டத்தையே சுற்றி வருவது போல உணர்வை ஏற்படுத்தும்.

திருவோணம், சுவாதி நட்சத்திரங்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

நாள்தோறும் மூன்று கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 5.00 மணி – இரவு 7.30 மணி

### உறங்காப்புளி

நவதிருப்பதிகளில் ஒன்றான ஆழ்வார் திருநகரியில் நம்மாழ்வார் குழந்தையாய் அவதாரம் செய்த உடன் பதினாறு ஆண்டுகள் தங்கியிருந்த புளியமரம், புனிதமாகக் கருதப்படுகிறது.

பொதுவாக புளியமரம் இலைகள் இரவில் மூடிவிடும் ஆனால் இம்மரத்து இலைகள் இரவில் மூடாது. அதனால் உறங்காப்புளி என திருப்பெயர் பெற்றது.

நாராயணன் நம்மாழ்வாராக எழுந்தருளியபோது "ஆதிசேன்" புளியமரமாக மாறினார் என்பது வழக்கு.



## 40. அருள்மிகு சென்னியாண்டவர் திருக்கோயில்

### விராலிக்காடு

கோவை – அவிநாசி தேசிய நெடுஞ்சாலையில் கருமத்தம்பட்டியிலிருந்து 4 கி.மீ. தொலைவில், சாலைக்கு வலப்புறம் அமைந்துள்ளது இந்தத் திருக்கோயில். சென்னிமலை அதிக தொலைவில் இருந்ததால் இப்பகுதி மக்கள் அருகில் உள்ள குன்றில் சென்னியாண்டவர் திருக்கோயிலைப் போலவே, இத்திருக்கோயிலையும் அமைத்தனர். குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனுக்கு கோயில் எழுப்புவது தமிழர் மரபு. முருகனுக்கு உகந்த விழாவான தைப்பூசத் திருவிழாவின் போது விரதம் இருந்து காவடி எடுத்து பாதை யாத்திரையாக சென்னிமலை சென்று குமரக்கடவுளுக்கு நேர்த்திக்கடனை செலுத்துவது இப்பகுதியில் வழக்கமாக உள்ளது.

அதனால் சிறு குன்று பகுதியாக இருந்த, விராலி மரங்கள் அடர்ந்து இருந்த இந்த விராலிக்காட்டில் அழகிய கோயில் அமைத்து சென்னியாண்டவர் என்று திருநாமம் சூட்டி வழிபடத்துவங்கினர். கொடிமரம், முன் மண்டபம்,

அர்த்தமண்டபம், அழகிய கருவறை என்று சிவாகமமுறைப்படி வடிவமைக்கப்பட்டு உள்ள இக்கோயில் வடக்கு நோக்கி அமைந்துள்ளது.

திருக்கோயிலில் மூலவர் சென்னியாண்டவர் சந்நிதி தவிர கன்னிமூலையில் விநாயகர், அடுத்து வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர், காசி விசுவநாதர் – விசாலாட்சி மற்றும் கோஷ்ட தெய்வங்களோடு நவக்கிரக சந்நிதிகளும் அமைந்துள்ளன. சென்னியாண்டவருக்கு செய்யப்படும் ராஜ அலங்காரம் தனிச்சிறப்பு வாய்ந்தது. ஐப்பசி மாதம் சூரசம்காரமும், தைமாதம் 12 நாட்கள் தைப்பூசத் தேர்த்திருவிழாவும் நடைபெறுகின்றன.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர் களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

தினமும் 4 கால பூஜைகள் நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 1.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.30 மணி

தொலைபேசி : 0421 – 2333098

**மின் அஞ்சல்:** senniandavarviralikadu@gamil.com





## 41. அருள்மிகு
## காலகாலேசுவரர் திருக்கோயில்

### கோவில்பாளையம்

கோவை நகருக்கு வடகிழக்கே கோவை – சத்தியமங்கலம் நெடுஞ்சாலையில் 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது கோவில்பாளையம்.

கொங்கு நாட்டு “திருக்கடையூர்” என்று இத்திருத்தலம் புகழ் பெற்றுள்ளது.

மார்க்கண்டேயனின் உயிரைக் கவர பாசக்கயிற்றை வீசிய போது ஈசுவரனின் திருமேனியைச் சுற்றி இழுத்து எம்பெருமானை அவமதித்த குற்றம் நீங்கிட, அறக் கடவுளான யமதர்மன் இங்கு வந்து வழிபட்டதாக வரலாறு. அதனால் யமபயம் இல்லை என்று கருதப்படும் தலம்.

திருக்கடையூரைப் போலவே மணிவிழா, பீமரத சாந்தி, சதாபிகேம் போன்ற நிகழ்ச்சிகள் இங்கே பெரும் எண்ணிக்கையில் நடைபெறுகின்றன. ஆயுட்காரகனாகிய சனீசுவரனுக்கு உகந்த பரிகாரத் தலமாக கருத்தப்படுகிறது.

இங்குள்ள தட்சிணாமூர்த்தியின் திருவுருவம் மிக



அற்புதமாக படைக்கப்பட்ட சிலை வடிவம் ஆகும். வியாழக்கிழமை தோறும் பக்தர்கள் அதிகம் வருகின்றனர்.

மூலவர் காலகாலேசுவரர் திருமேனி கடல்நுரையினால் ஆன திருமேனி என்று கருதப்படுகிறது. நாள்தோறும் நான்கு கால பூஜைகள் நடைபெறுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

தொலைபேசி: 0422 – 2654646





## 42. அருள்மிகு கவையகாளியம்மன் திருக்கோயில்

### கோவில்பாளையம்

கோவை – சத்தியமங்கலம் நெடுஞ்சாலையில் 18 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள காலகாலேசுவரர் திருக்கோயிலுக்கு வடக்கே அமைந்துள்ளது இத்திருக்கோயில். கவையன் என்னும் இருளர் தலைவனுக்கு அருள்புரிந்ததால் இத்தலத்தில் உள்ள அம்மன் கலையகாளியம்மன் என்று அழைக்கப்படுகிறார்.

11ம் நூற்றாண்டில் சோழ நாட்டை ஆண்ட கரிகாற்சோழன், கொங்கு நாட்டில் 36 கோயில்களைப் புதுப்பித்தான். கொங்கு நாட்டில் இப்பகுதியில் காட்டை அழித்து காளிகோயில் கட்டுவதற்கு இருளனுக்கு துணை நின்றான்.

கருவறையில் அம்மன் அசுரன் தலைமீது வலதுகாலையும், முதுகின்மீது இடது காலையும் ஊன்றியுள்ளாள். நான்கு கரங்களிலும் சூலம், அங்குசம், பாசம், கபாலம் ஆகியவற்றை ஏந்தியுள்ளாள். கருவறையின் வாயிலை ஒட்டி சதுரமான கல் ஒன்று உள்ளது. அதுவே இருளன் வழிபட்ட ஆதி கவைய காளியம்மன்.

கோவிலின் உள்ளே இடதுபுறம் நவக்கிரக சந்நிதி உள்ளது. உள்சுற்றில் நஞ்சுண்டேசுவரர், கரிவரதராஜ

பெருமாள், துர்க்கை சந்நிதிகள் உள்ளன. வடமேற்கு மூலையில் வேட்டுவர் பாணியில் அம்பிகை சிலை ஒன்று உள்ளது. அருகிலேயே உடலின் கீழ்ப்பகுதி பாம்பு உருவமாகவும் மேல் பகுதி பெண் உருவமாகவும் உள்ள நாக கன்னிகை அம்மன் சிலை ஒன்று உள்ளது. அதன் தலைக்கு மேல் ஐந்து தலை நாகம் குடைபிடிப்பது போல உள்ளது.

நாள்தோறும் 3 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.30 மணி

## மயிலே குதிரையாக

அருணகிரிநாதர் திருப்புகழிலும், மற்ற பாடல்களிலும் மயிலைத் தனிச் சிறப்புடன் பல அடைமொழிகள் தந்து சிறப்பித்து உள்ளார். அவர் மயிலை குதிரையாகவும் தேராகவும், நாட்டிய தேவதையாகவும், அழகுக்கு அழகு சேர்க்கும் பொருளாகவும் பல்வேறு உவமைகள் தந்து சித்தரிக்கிறார்.

வயலூர் திருப்புகழில் பக்கரை விசித்திரமணி பொற்கலனை இட்டு நடப்பட்சி என்னும் உக்ரதுரகம் என்று மயிலைப் போற்றுகிறார். பல வண்ணங்கள் பதிக்கப்பட்ட பொன்னாலான அணிகலன்களைப் பூண்டு நடனமிடும் பறவையான மயில், கோபம் கொண்டு திமிரிப்பறக்கும் குதிரைபோல் உள்ளது என்பது இதன் பொருள். “மயில்” குதிரையாக இதில் உருவகம் செய்யப்படுகிறது.



## 43. அருள்மிகு மன்னீசுவரர் திருக்கோயில்

### அன்னூர்

கோவை – சத்தியமங்கலம் நெடுஞ்சாலையில் 32 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது அன்னூர். அருள்மிகு மன்னீசுவரர் திருக்கோயில், அன்னூர் பேருந்து நிலையத்திலிருந்து மிக அருகில் உள்ளது.

அன்னூர் ஊருக்கு கோவை, அவிநாசி, திருப்பூர் மேட்டுப்பாளையம் போன்ற பகுதிகளிலிருந்து பேருந்து வசதிகள் நிறைய உள்ளன.

கி.பி.11ம் நூற்றாண்டில் இக்கோயில் கட்டப்பட்டிருக்கலாம் என்று கருத்தப்படுகிறது கி.பி. 1006ஆம் ஆண்டில் கோனாட்டான் கலிமூர்க்கன் கல்வெட்டு இங்கே கண்டறியப்பட்டுள்ளது.

வள்ளிக்கிழங்கு காடாக இருந்த இப்பகுதியில் ஒரு வேடன் வள்ளிக்கிழங்கை தோண்டி எடுக்க முற்பட்டபோது அந்த கிழங்கு இருந்த இடத்தில் இருந்து குருதி வெளிப்பட்டதாம். அதிர்ச்சி அடைந்த வேடன் மன்னனிடம் கூற அப்பகுதியை



அப்பகுதியை தோண்டிப்பார்த்ததில் சிவலிங்கத்திருமேனி ஒன்று வெளிப்பட்டது. (உயிர்களைக் கொல்லும் பாவங்களை இனி செய்யாதே, இதுவரை நீ செய்த குற்றங்கள் மன்னிக்கப்பட்டன! ) என்று அசரிரீ உறைத்தது. இந்நிகழ்ச்சியைத் தொடர்ந்து மன்னீசுவரர் என்ற திருநாமம் கொண்டு ஈசனுக்கு அழகியதோர் ஆலயம் ஒன்று எழுந்தது.

அன்னை அருந்தவச்செல்வி என்று திருநாமம் கொண்டுள்ளாள். "திருக்காமக்கோட்ட நாச்சியார் ஸ்ரீ தபோதக சௌந்தரி அருந்தவச்செல்வி" என்று கல்வெட்டு கூறுகிறது. இங்குள்ள தட்சிணாமூர்த்தி சிலை மிகவும் அழகியது. கொங்கு நாட்டின் நவக்கிரகத் தலங்களில் இத்தலம் குருபரிகாரத் தலமாக கருதப்படுகிறது. நாள்தோறும் 4 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 1.00 மணி

மாலை 4.30 மணி – இரவு 8.30 மணி

**தொலைபேசி: 04254 – 262450**

**மின் அஞ்சல்:** annurmanneeswarar@gmail.com

## 44. அருள்மிகு
## கரிவரதராஜப் பெருமாள் திருக்கோயில்
அன்னூர்

அருள்மிகு மன்னீசுவரர் திருக்கோயிலுக்கு எதிரிலேயே அமைந்துள்ளது கரிவரத ராஜப்பெருமாள் திருக்கோயில்.

"ஆனைக்கு அருளிய எம்பெருமான்" ஸ்ரீதேவி, பூதேவியுடன் சேவை சாதிக்கிறார். தனி தாயார் சந்நிதியும் உள்ளது. ஆண்டாள், சக்கரத்தாழ்வார், ஆஞ்சநேயர் சந்நிதிகள் உள்ளன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி– பகல் 1.00 மணி

மாலை 4.30 மணி – இரவு 8.30 மணி

## 1000 சிறு தூண்கள் கொண்ட பெருந்தூண்

ஆயிரம் சிவலிங்கங்களைத் தன்னுள் கொண்ட சகஸ்ரலிங்கத் திருமேனியாகக் காண்கிறோம். இதனைப் போலவே ஆயிரம் சிறு தூண்களைத் தன்னுள் கொண்ட "பெருந்தூண்" புதுக்கோட்டை மாவட்டம் ஆவுடையார் கோயில் ஆத்மநாதசுவாமி ஆலயத்தில் உள்ளது.



## 45. அருள்மிகு விருந்தீசுவரர் திருக்கோயில்

### வடமதுரை

கோவை – உதகை நெடுஞ்சாலையில் துடியலூரைத் தாண்டியபின் கிழக்குபுறம் பிரியும் சாலையோரத்தில் உள்ள திருக்கோயில். சேரமான் பெருமானை சந்தித்து விட்டு திரும்புகையில் சுந்தரமூர்த்தி நாயனார் இத்திருத்தலத்தில் உறையும் ஈசனை வழிபட்டதாக வரலாறு கூறுகிறது.

தன் பக்தன் பசியாறிட ஈசனே சுந்தரருக்கு உணவு படைத்ததால் “விருந்தீசுவரர்” என்று திருநாமம் கொண்டுள்ளார். கோவை நகரை விட்டு வடக்கே செல்லும் போதும் நாம் காணும் முதல் சிவன் கோயில் இது மிகவும் பழமையான திருக்கோவில்.

மாதாந்திர பிரதோ வழிபாடு மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. நாள்தோறும் 2 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி



## 46. அருள்மிகு
## பள்ளிகொண்டரங்கநாதசுவாமி திருக்கோயில்
### இடிகரை

கோவையிலிருந்து வடக்கே 24 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது இடிகரை. இவ்வூருக்கு பெருமை சேர்ப்பது அருள்மிகு பள்ளிகொண்டரங்கநாதசுவாமி திருக்கோயில். நுழைவாயிலில் மூன்று நிலை இராஜகோபுரமும், தசாவதார சுதை சுற்பங்கள் கொண்ட முன் மண்டபமும் கொண்ட திருக்கோயில்.

பள்ளிகொண்டரங்கநாதசுவாமி மூலவராய் சேவை சாதிக்கிறார். உற்சவர் சீதேவி, பூதேவியுடன் கஸ்தூரி ரங்கப்பெருமாள், தாயார் ரங்கநாயகி.

அருகிலேயே ராமபிரான் வழிபட்டதாகக் கூறப்படும் வில்லீசுவரர் திருக்கோயிலும் உள்ளது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி



## 47. அருள்மிகு காளத்தீசுவரர் திருக்கோயில்

காளம்பாளையம்

கோவை – உதகை நெடுஞ்சாலையில் காரமடைக்கு மேற்கே தாயனூர் – தேக்கம்பட்டி செல்லும் சாலையில் உள்ளது காளம்பாளையம்.

காளன் புஜங்கன் என்ற இருநாகங்கள் வழிபட்ட காளத் தீசுவரர் திருக்கோயில் இங்கே அமைந்துள்ளது. அன்னை ஞானப் பிரசன்னாம்பிகை என்ற திருநாமத்துடன் காட்சி தருகிறாள். நாள்தோறும் ஒரு காலபூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

## 48. அருள்மிகு காரணவிநாயகர் திருக்கோயில்

மத்தம்பாளையம்

கோவையிலிருந்து மேட்டுப்பாளையம் செல்லும் வழியில் மத்தம்பாளையம் அமைந்துள்ளது. நாயக்கமன்னர்கள் ஆளுகையின் போது ஊர்கள் பாளையங்கள் ஆனபோது உருவான ஊரே மத்தம்பாளையம். இத்தலத்தில் சாலை ஓரத்து பிள்ளையாராக எழுந்தருளி உள்ளார் காரண விநாயகர். மனித வாழ்வின் எல்லா நிகழ்வுகட்கும் காரணன் இவர். அதனுல் இவருக்கு காரணவிநாயகர் என்று பெயர் ஏற்பட்டது.

400 ஆண்டுகளுக்கு முன்பு விநாயகர் திருக்கோயில் ஒன்றை அமைக்க காஞ்சிவாய்ப் பேரூரிலிருந்து மாட்டு வண்டியில் ஒரு விநாயகர் சிலை மேட்டுப்பாளையம் நோக்கி சென்றது. ஆனால் மத்தம்பாளையம் வந்ததும் அதன் அச்சு முறிந்து தரையில் இறக்கப்பட்டது. வண்டியை பழுது பார்த்து சிலையை மீண்டும் வண்டியில் ஏற்ற முயற்சித்தபோது நிலத்தில் வைத்த பிள்ளையார் சிலையை அகற்ற முடியாமல் போய்விட்டது. வேறுவழியின்றி அங்கேயே விநாயகருக்கு கோவிலும் அமைக்கப்பட்டது.

ஆங்கிலேயேர் ஆட்சியில் சலிவன் என்ற மாவட்ட ஆட்சியர் காலத்தில் உதகைக்கு சாலை அமைக்கும் பணி துவங்கப்பட்டது அப்போது சலிவன் துரை, விநாயகர் கோயிலை அகற்றிட உத்திரவிட்டார். ஆனால் அன்றிரவு சலிவன் கனவில் ஒரு யானை வந்து பயங்கரமாக பிளிறியது போல கண்டார். அதன்பேரில் மறுநாளே சாலையை வேறுவழியாக மாற்றியமைக்க உத்தரவிட்டார்.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

தொலைபேசி: 04254 - 272900



## 49. அருள்மிகு வனபத்திரகாளியம்மன் திருக்கோவில்

### தேக்கம்பட்டி

''தேவிகோட்டம்'' என்று அழைக்கப்படும், வனபத்திரகாளியம்மன் திருக்கோயில், பவானி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. காரமடையிலிருந்து காளம்பாளையம் செல்லும் பாதையில் சென்று, வடக்கே திரும்பி தேக்கம்பட்டி சென்று திருக்கோயிலை அடையலாம். மேட்டுப்பாளையத்திலிருந்து தேக்கம்பட்டி செல்வதே பெரும்பான்மையாக உள்ளது.

''நெல்லித்துறை'' என்ற பழமையான தலமும், நெல்லிமலை என்றழைக்கப்படும் பசுமை தவழும் குன்றும், தேக்கம்பட்டியையொட்டி அமைந்துள்ளன.

அடர்ந்த காட்டுப்பகுதியில், காளி எழுந்தருளியிருப்பதால், "வனபத்திரகாளியம்மன்" என்று அழைக்கப்படுகிறாள். பவானியில் நீராடி ஆற்றின் கரையில் உள்ள விநாயகரை வழிபட்டபின் அம்மனை தரிசிக்க மக்கள் கூடுவர்.



பாரதக் கதையில் கூறப்படும் “பகாசுரன்” இப்பகுதியில் வாழ்ந்ததால் நீலகிரி மலைச்சாரலில் ஒரு குன்று பகாசுரமலை என்றும், அதன் உச்சியில் “பகாசுரன் கோட்டை” என்றும் அழைக்கப்படுகிறது. பீமன் பகாசுரனை வதம் செய்த இடமும் இதுவே என்பர். அதன் நினைவாகவே திருக்கோயிலின் முன்புறம் பீமனுக்கு பகாசுரனுக்கும் சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன.

செவிவழிக் கதைகளில் ஆரவல்லி, சூரவல்லி, வீரவல்லி முதலான ஏழு கன்னியர் நெல்லூார் பட்டணத்தை ஆண்டு வந்ததாகவும், அவர்களை எவரும் வெல்லமுடியாத மந்திர, தந்திர வித்தைகளையும் அறிந்தவர்கள். இப்பகுதியே அவர்கள் வாழ்ந்த பகுதி என்றும் கூறுவர். அமாவாசை நாட்களில், தொலை துாரத்தில் இருந்து மக்கள் வந்து காளியம்மனை வழிபடும் மக்கள் கணக்கிலடங்கா. “காளிச்சக்கரம்” என்னும் தாயத்தை திருக்கோயிலில் அம்மனின் பாதங்களில் வைத்து, வணங்கி அணிந்து கொள்வர்.

**குண்டம் திருவிழா**

வாரத்தில் செவ்வாய், வெள்ளி, ஞாயிறு, அமாவாசை நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. ஆடி மாதத்தில் அமாவாசையையொட்டி குண்டம் திருவிழா நடைபெறும். 36 அடி நீளம் கொண்ட குண்டத்தில் ஆடிச் செவ்வாயன்று, பக்தர்கள் குண்டம் இறங்குவர்.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

கருணை இல்லம்

ஆதரவற்ற குழந்தைகளுக்காக "கருணை இல்லம்" ஒன்று திருக்கோயிலால் நடத்தப்படுகிறது. பக்தர்கள் தங்குவதற்காக தங்கும் விடுதி ஒன்றும் அமைக்கப்பட்டு உள்ளது.

நாள்தோறும் 4 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04254 – 222286

**மின் அஞ்சல்:** vanabadrakali@vsnl.net.,
vanabadrakaliamman@tnhrce.org

**இணையதளம்:** www.thekkampati-vanabadrakali.org.





## 50. அருள்மிகு குழந்தைவேலாயுதசுவாமி திருக்கோயில்

### குருந்தமலை

கோவை மாவட்டம், காரமடையிலிருந்து வெள்ளியங்காடு செல்லும் பாதையில் 5 கி.மீ. தொலைவில் உள்ளது குருந்தமலை. நீலமலை சாரலிலே பகாசுரன்மலை, சஞ்சீவிமலை, வள்ளி மலை ஆகிய மலைகளின் நடுவே குருந்தமரங்கள் நிறைந்த காட்டுப் பகுதியில் உள்ளது.

மலை நுழைவாயில் எதிரே உள்ள குன்றில் கஜபுஷ்கரணி, அனுமன் சுனை ஆகியவை உள்ளன. அனுமனின் பாதமும் உள்ளது. அதை ஒட்டி அனுமன் சந்நிதியும் உள்ளன.

மலை உச்சியில் ஐந்து நிலை ராஜகோபுரத்துடன் அமைந்துள்ளது அழகிய கோயில், கொரட்டு வாசல் மண்டபத்தைக் கடந்து சென்றால் கிழக்கு பார்த்த சப்த கன்னியர் சன்னதியும், அதனையடுத்து 18ம் படியில் கருப்பண்ணசுவாமி



அதனையடுத்து இடும்பன் கோயிலும் உள்ளது. கோயில் மேல்தளத்தில் ஈசானிய மூலையில் காசிவிசுவநாதர் விசாலாட்சி சந்நிதிகள் உள்ளன. குழந்தையே வடிவான வேலாயுத சுவாமி சந்நிதி கருவறையில் தண்டமும், வேலும் ஏந்தி காட்சி தருகிறார்.

போகர் சப்த காண்டம் ஏழாயிரத்தில், 5வது காண்டத்தில் குருந்தமலை பற்றி குறிப்பு ஒன்று உள்ளது. அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்றத்தலம். பஞ்சலிங்கங்கள், பஞ்சாட்சரகணபதி, கல்யாண சுப்பிரமணியர் சந்நிதிகளும் உள்ளன. தைப்பூசத் திருவிழா தேரோட்டத்துடன் நடைபெறுகிறது.

நாள்தோறும் மூன்று கால வழிபாடு நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.30 மணி

தொலைபேசி: 04254 – 274747



## 51. அருள்மிகு அரங்கநாதசாமி திருக்கோயில்

### காரமடை

கோவை - உதகை நெடுஞ்சாலையில் கோவைக்கு வடக்கே 30 கி.மீ. தொலைவில் அமைந்த திருக்கோயில், காரைச் செடிகளுக்கு இடையே அரங்கர் வெளிப்பட்டு பின் கோயில் எழுந்தது. சாலையின் வலதுபுறம் திருக்கோயிலுக்குச் செல்லும் "அலங்கார வளைவு" உள்ளது.

காரைச்செடிகள் நிறைந்து காணப்பட்ட இடத்தில் அமைந்ததால் காரமடை என்று பெயர் ஏற்பட்டது.

ஒரு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள இத்திருக்கோயிலில் உறையும் மூலவர் திருப்பெயர் அரங்கநாதர். சுமார் ஒரு அடி உயரம் உள்ள சுயம்புப் பெருமாள். உடன் உறையும் தாயார் திருநாமம் அரங்கநாயகி. உற்சவராக வெங்கடேசப் பெருமாள் சேவை சாதிக்கிறார். திருமகளும், நிலமகளும் இங்கே பெட்டத்தம்மன், துளசியம்மன் என்ற பெயர்களில் அழைக்கப்படுகிறார்கள்.

காரமடையிலிருந்து 1 கி.மீ தொலைவில் உள்ள பெட்டத்தம்மன் மலையை அரங்கநாயகியின் வடிவம் என்பர். திருக்கோயிலில் உள்ள கருடத்தீர்த்தம் புனிதமானது. இராமாநுஜர் மேலக்கோட்டை செல்லும் வழியில் இத்தலத்திற்கு வருகை புரிந்ததாகக் கூறப்படுகிறது.

மற்ற வைணவத்தலங்களில் உள்ளது போல சடாரி இல்லாமல் 5 அடி நீளமுள்ள வெள்ளியால் செய்யப்பட்ட இராமபாணத்தால் பக்தர்கள் ஆசீர்வதிக்கப்படுகிறார்கள்.

**தேர்திருவிழா**

மாசி மாதம் நடைபெறும் தேர்த்திருவிழா சிறப்பானது. கோவை மாவட்டத்தில் நடைபெறும் மிகப்பெரிய பெருமாள் திருத்தேராகும். அப்போது பக்தர்களால் நடத்தப்படும் பந்தசேவையும், தோல்பையில் தண்ணீர் கொண்டு செல்லும் தண்ணீர் சேவையும் சிறப்பானவை.

பாஞ்சராத்திர முறைப்படி நாள்தோறும் 6 கால பூஜை நடைபெறுகிறது.



**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி– இரவு 8.00 மணி

தொலைபேசி: 04254 – 272318

**மின் அஞ்சல்:** karaiarangan@gmail.com







## 52. அருள்மிகு நஞ்சுண்டேசுவரர் திருக்கோயில்

காரமடை

கோவை – உதகை நெடுஞ்சாலையில் கோவைக்கு வடக்கே 30 கி.மீ. தொலைவில் உள்ள காரமடை அரங்கநாதர் திருக்கோயிலுக்கு அருகே உள்ளது.

கன்னட தேசத்தை ஆட்சி செய்த வீரநஞ்சராயரால் வனப்பகுதியாக இருந்த இடத்தில் 1700 ஆண்டுகளுக்கு முன்னர் இந்தக் கோயில் அமைக்கப்பட்டது.

மதுரை மீனாட்சி அம்மன் ஆலயத்தில் சோமசுந்தரர் கருவறையை எட்டு யானைகள் தாங்கி நிற்கும் விமானம் போலவே நஞ்சுண்டேஸ்வரர் ஆலயத்தில் கருவறை எட்டு யானைகளால் தாங்கப்பட்டு நிற்கிறது. அதன் சுவர்களில் அழகிய சிற்பங்கள் உள்ளன. இதனால் இத்தலத்தை கொங்கு நாட்டு மதுரை என போற்றுகின்றனர்.

நஞ்சுண்டேசுவரரை வழிபட்டால் நேய்கள் அனைத்தும் நீங்கும். வாழ்வில் நலம் பெருகும் என்பது மக்கள் நம்பிக்கை.

மகா சிவராத்திரி விழா, மிக பிரம்மாண்டமாக இங்கே நடைபெறுகிறது. சூலம் ஏந்திய சிவதுர்க்கை சந்நிதி இங்கே உள்ளது தனிச்சிறப்பு. அன்னை உலகநாயகியின் சந்நிதியிலே மாங்கல்ய தோம் நீங்கிட தாலியை உண்டியலில் சமர்ப்பிப்பது இங்கு வழக்கம். நாள்தோறும் 3 கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

தொலைபேசி: 04254 – 272318



## சோமாஸ்கந்தர்

கொங்கு நாட்டில் வெள்ளியங்கிரி, மருதமலை, நீலமலை ஆகிய மூன்றும் ஒன்றுசேர்ந்து அமைந்திருப்பது சோமாஸ்கந்தரை நினைவுபடுத்துகிறது என்று பேரூர் தலபுராணம் கூறுகிறது. வெள்ளியங்கிரிமலை சிவ பெருமானையும், நீலமலை உமாதேவியையும், நடுவே உள்ள மருதமலை முருகனையும் குறிக்கின்றன.



## 53. அருள்மிகு
## அனுமந்தராய சுவாமி திருக்கோயில்
### இடுகம்பாளையம்

கோவை மாவட்டம், சிறுமுகையிலிருந்து கிழக்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது இடுகம்பாளையம்.

ஆறு அடி உயரம், ஐந்து அடி அகலம் உள்ள ஒரே பாறையில் கம்பீரமாகத் நேர் பார்வை கொண்டவராக, ஜெயமங்கள ஆஞ்சநேயர் அருள் பாலிக்கும் திருத்தலம். 650 ஆண்டுகளுக்கு முன்னர், விஜயநகர மன்னர்கள் காலத்தில் உருவான திருக்கோயில் இது. அருகிலேயே ராமலிங்கேசுவரர் திருக்கோயிலும் உள்ளது.

பொதுவாக ஆஞ்சநேயர் இடதுபுறமாகவோ அல்லது வலதுபுறமாகவோ நின்றபடி, சஞ்சீவி மலையைத் தாங்கியபடியோ, அல்லது கதாயுதத்தை பிடித்தபடியோ காட்சி தருவார். ஆனால் இடுகம்பாளையத்தில், நேர்கொண்ட பார்வையுடன் அருள்பாலிப்பது தனிச்சிறப்பு.

உள்ளத்தைத் கவரும் கண்களும், முத்துப்பற்கள் வரிசையும் புன்முறுவலுடன் கூடிய இதழ்களும், உருண்டு திரண்ட தோள்களிலும், நெற்றியிலும் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்



திருமண் காப்பும், உருண்டு திரண்ட கணுக்கால்கள், அழகிய முழங்கால்களும் சிறப்பம்சமானவை. சௌகந்திக மலரை இடக்கரத்தில் தாங்கியபடியும், அஞ்சேல் என வலக்கரத்தை உயர்த்தியும் பக்தர்களுக்கு அபயம் அளிக்கும் திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார்.

ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் சனிக்கிழமை ஆஞ்சநேயருக்கு சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. இராமநவமி, அனுமத் ஜெயந்தி போன்ற நாட்களில், சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்து சிறப்புப் பேருந்துகள் மூலம் பெரும் எண்ணிக்கையில் மக்கள் கூடுகிறார்கள். அருகிலேயே இராமலிங்கேசுவரர் திருக்கோயிலும் உள்ளது.

நாள்தோறும் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின் கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

தொலைபேசி : 04254 - 224167

மின் அஞ்சல் : anumantharayar@gamil.com



## 54. அருள்மிகு குமாரசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

### ஓதிமலை

கோவை மாவட்டம், மேட்டுப்பாளையத்திலிருந்து புளியம்பட்டி செல்லும் சாலையில் இரும்பறை என்ற ஊரிலிருந்து 1.5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது ஓதிமலை குமாரசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்.

தமிழகத்தில் முருகப்பெருமான் குடிகொண்டுள்ள குன்றுகளில் ஓதிமலை மிகவும் உயரமானது, செங்குத்தானது.

அடிவாரத்திலிருந்து 1800 படிகள் அமைக்கப்பட்டுள்ளன. முருகன் ஆலயம் கற்றளியாக உள்ளது. கோவிலின் உள்ளே நுழைந்ததும் இடும்பன் சந்நிதி, அர்த்தமண்டபம் கருவறையில் முருகப்பெருமான் ஐந்து முகங்களுடன், எட்டு கரங்களுடன் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார்.

பழனி திருத்தலத்திற்கு நவபாசான சிலை செய்வதற்கு புறப்பட்ட போகர் வழி தெரியாமல் தவித்தார். அவருக்கு ஒரு முகம் நான்கு கரங்களுடன் முருகன் இறங்கி வந்து குமாரபாளையம் என்னும் ஊர்வரை வழிகாட்டினாராம். இந்தத் தோற்றம் குமார தந்திரம் மற்றும் 28 சிவாகமங்களிலும் விளக்கப்படாத அதி அற்புத திருமேனியாகும். பிரம்மனை இரும்பு அறையில் முருகன் சிறைவைத்ததால் இரும்பறை



என்றும், மலைமீது குருவாக நின்று வேத ஆகமப் பொருளை ஈசனக்கு ஓதியதால் ஓதிமலை என்றும் சிறப்பு பெற்றது.

ஞானமலை, ஓதிமலை, ஓதியங்கிரி என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. இரும்பறையில் மலையின் அடிவாரத்தில் கைலாச நாதர் ஆலயம் உள்ளது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 8.00 மணி

## தீ

உலகின் ஆக்க சக்திக்கு ஆதாரமாக உள்ளது தீ என்ற நெருப்பு ஆகும். முதலில் ஆகாயமும், அதனுள் வளிமண்டலமும் அதிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் படிப்படியாகத் தோற்றுவிக்கப்பட்டன. காற்று, நீர், நிலம், தீ, ஆகாயம் ஆகியவற்றில் தீ ஒன்றாக இருந்தாலும், அது மற்ற நான்கு பொருட்களில் மறைந்து நின்று, அவற்றை தொழிற்படுத்தும் சக்தியாக விளங்குகிறது.

"தீ" யே வானில் மின்னல் இடியாகவும், நிலத்தில் எரிமலையாகவும், கடலில் வடவைத் தீயாகவும், காற்றுக்குள் உரசற்தீயாகவும் (இடி) மறைந்து நின்று செயல்படுகிறது.




## 52. அருள்மிகு
## கல்யாணசுப்பிரமணியசுவாமி திருககோயில்
### குமரன்குன்று

கோவை மாவட்டம், மேட்டுப்பாளையத்திலிருந்து அன்னூர் செல்லும் பாதையில் தெற்கே அமைந்துள்ளது இத்திருத்தலம், மேட்டுப்பாளையம் அல்லது அன்னூரிலிருந்து இக்கோயிலுக்கு சென்றடையலாம்.

குமரன் குன்று ஆலயம் மிகவும் பழமையானது. புதர் மண்டிக்கிடந்த குன்றில் மக்கள் விவசாயம் செய்யும் போது ஆடு, மாடுகளை குன்றின் மேல் மேய்த்து வந்தனர். அப்போது மலையின் உச்சியில் ஒரு வேப்பமரத்தடியில் புதருக்குள்ளே கருங்கல்லினால் ஆன முருகன் திருவுருவத்தைக் கண்டனர். ஒரு பழமையான கோவிலின் சுவரும் அருகில் அழிந்துபோன நிலையில் இருந்தது.

60 ஆண்டுகளுக்கு முன்பு கண்டுபிடிக்கப்பட்ட இக்கோயிலை பக்தர்கள் இடத்தை தூய்மைசெய்து சிறு கோயிலாக வழிபட்டனர். 5 ஆண்டுகளுக்குப் பிறகு வள்ளிதெய்வானையுடன் சுப்பிரமணியசுவாமி சிலையை பிரதிஷ்டை செய்து பக்தர்கள் வழிபட்டு வருகின்றனர்.

ஆண்டுதோறும் சித்திரை மாதம் முதல் தேதி சூரியன் உதயமாகும் போது சூரியனின் ஒளிக்கதிர்கள் மூலவர் சுப்பிரமணியசுவாமி முகத்தில் படிந்து வழிபடுவது காண்பதற்கு அரிய காட்சியாகும். முந்தைய நாள் இரவே பக்தர்கள் ஆலயத்தில் கூடி அதிகாலையில் இவ்வரிய காட்சியை வழிபடுவது திருக்கோயிலின் சிறப்பு

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – பகல் 12.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.30 மணி

**தொலைபேசி: 04254 – 288206**

## விமானம்

விமானம் என்பதற்கு மேலான அன்பு என்று பொருள். மானம் என்றால் அளவு. பண்டைய காலத்தில் கருவறையின் கூரைமீது அமைக்கப்படும் விமானங்கள் ஒற்றைத்தளத்தையே கொண்டிருந்தன. சோழர் காலத்தில் தான் அதிக அளவு அடுக்குகள் கொண்ட விமானங்கள் அமையப்பெற்றன. தஞ்சை, தாராசுரம், கங்கை கொண்ட சோழபுரம், திருபுவனம் போன்றவை பல அடுக்குகள் கொண்ட விமானங்களைக் கொண்டுள்ளன.

பிற்காலத்தில் பழையபடியே கருவறை மீது அமையும் விமானத்தை இரண்டு அல்லது மூன்று அடுக்குகளுடன் அமைத்துவிட்டு, திருக்கோயிலின் வாயிலின்மீது அழகிய கோபுரங்களைக் கட்டத்துவங்கினர். விஜய நகர மன்னர்கள், இதற்கு முன்னோடியாக இருந்தனர். கோபுரங்களை இராஜகோபுரம் என்றும் அவற்றின் அடுக்குகளை "நிலைகள்" என்றும் அழைப்பர்.

சிவாகமத்தில் விமானங்கள் 7 வகையாகக் கூறப்பட்டுள்ளன. அவை விஜயம், ஸ்ரீபோகம், ஸ்ரீ விலாசம், ஸ்கந்த காந்தம், ஸ்ரீகரம், ஹஸ்திபிருஷ்டம், கேசரம் எனப்படும்.

## நீலகிரி மாவட்டம்





## 56. அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்

### உதகமண்டலம்

நீலகிரி மாவட்டம், குளிர் காற்று, பெருமழை, கடும்பனி நிறைந்ததால் சீதவளநாடு என்று அழைக்கப்பட்டது. நீலகிரி மாவட்டத்தின் தலைநகரான உதகைமண்டலத்தில் மையப்பகுதியில் நாளங்காடி என்ற பகுதியில் அமைந்துள்ள திருக்கோயில்.

ஒரே பீடத்தில் காளியம்மனையும், மாரியம்மனையும் அமர்த்தி கோயில் எழுப்பியுள்ளனர்.

உதகை மாரியம்மன் காளியம்மனாகவும், மாரியம்மனாகவும் காட்டேறி அம்மனாகவும் மூன்று வடிவங்களைத் தாங்கி உள்ளாள். முன் காலத்தில் நாளங்காடியில் வணிகர்கள் கூடியிருந்தபோது வடக்கிலிருந்து இரண்டு சகோதரிகள் அங்கே வந்தனர். ஒளிமிகு கண்களுடன் சாந்தமேஉருவான தெய்வீக மணங்கமழும் முகத்துடன் வந்தவர்கள் தங்களுக்கு தங்குவதற்கு இடம் கிடைக்குமா என்று கேட்டனர்.

அவர்கள் யாரென்று அறியாத வணிகர்கள் அருகிலிருந்த வேப்பமரத்தைக் காட்டி அங்கே தங்கிக்கொள்ளுமாறு கூறினர். அப்போது அந்தப்பெண்கள் மறைந்து ஒரு கொடி மின்னல் விண்ணுக்கும், மண்ணுக்குமாக தோன்றி மறைந்ததாம், அந்த வேப்பமரத்தடியில் உருவானதுதான் இன்று நாம் காணும் மாரியம்மன் கோவில்.

ஆண்டுதோறும் நடைபெறும் சித்திரை தேர்த்திருவிழா மிகச் சிறப்புடையது.

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

**ஆன்மீக வகுப்புகள்**

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆன்மீக வகுப்புகள் நடத்தப்படுகின்றன. இத்திருக்கோயிலில் குளிரினைக் கருத்திற்கொண்டு பக்தர்கள் பாதணிகளைக் கழற்றாமல் கடவுளைத் தரிசித்து பிரசாதம் பெற ஏதுவாக இராஜ கோபுர வாயிலிலேயே விபூதி பிரசாதம் வழங்கப்படுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – மாலை 7.00 மணி

தொலைபேசி : 0423 – 2442754

**மின் அஞ்சல் :** ootymariamman@gmail.com



## 57. அருள்மிகு
## பாலதண்டாயுதபாணி திருக்கோயில்
### (திருமான் குன்று) எல்க்ஹில்

உதகை பேருந்து நிலையத்திற்கு நேர் எதிரே உள்ளது தான் எல்க் ஹில் எனும் குன்று. எல்க் எனும் மான்கள் அதிகமாக காணப்பட்ட இடம்.

அமைதியான சூழலில் முதலில் பாத விநாயகர் சந்நிதியும், ஜலகண்டேசுவரர் சந்நிதியும் உள்ளன. அன்னை நான்கு கரங்களுடன் பத்மபீடத்தில் நின்ற கோலத்தில் காட்சி தருகிறாள். அருகில் மகிா சூரனை வதம் செய்த துர்க்கை அம்மன் சந்நிதி உள்ளது.

கீழே ஜலகண்டேசுவரர் சிவலிங்கத்திருமேனியாக காட்சி தருகிறார். சற்று மேலே சென்றால் தனிக்கோயில் கொண்டுள்ள பாலதண்டாயுதபாணியை தரிசிக்கலாம். நின்ற கோலத்தில் ஒரு முகமும், இரு கரங்களும் கொண்டு வலக்கரத்தில் தண்டாயுதமும், இடக்கரத்தை இடுப்பிலும் ஊன்றியபடி உருத்திராக்க மணியை தலையில் அணிந்தபடி கோவணதாரியாக காட்சி தருகிறார் முருகன்.

மாதாந்திர கிருத்திகை மற்றும் சஷ்டி நாட்களில் பக்தர்கள் கூட்டம் கூட்டமாக முருகனை வணங்கிட வருகின்றனர். முருகனுக்கு பின்னே பள்ளிகொண்ட பெருமாள்

படுத்திருப்பது போன்ற தோற்றம் தெரிகிறது. அருகிலேயே நவகிரக சந்நிதி உள்ளது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – பகல் 11.00 மணி

மாலை 4.00 மணி – இரவு 7.00 மணி

தொலைபேசி: 0423 – 2442754

## கிரீவம்

கிரீவம் என்பது கருவறை விமானத்தின் கழுத்துப் பகுதியைக் குறிக்கும். நான்கு திசைகளையும் நோக்கியவாறு, இறைவனின் நான்கு வகை நிலைகளை உணர்த்தும் திருவுருவங்களை அமைத்தனர். பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், குமாரர் ஆகிய திருமேனிகள் அங்கு அமைக்கப்பட்டன. கருவறையின் அடிப்பகுதியிலிருந்து, உச்சியில் கலசம் வரையிலுள்ள பகுதிகளின் பெயர்கள் வரிசையாகக் கூறப்பட்டு, தினசரி பூஜை செய்யவேண்டுமென "பூஜாபத்ததி" என்ற விதிமுறை நூல் கூறுகிறது. கோவை பட்டீசுவரர் விமானத்தின் கிரீவப்பகுதியை எட்டுயானைகள் தாங்குவது போல அமைந்திருப்பதைக் காணலாம்.

## 58. அருள்மிகு சிவசுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

### குன்னூர்

குளிர்ந்த மேகங்களை போர்வையாக போர்த்திய மலைகளின் நடுவே உதகைக்கு கிழக்கே அமைந்துள்ளது குன்னூர். நகரப்பேருந்து நிலையத்திற்கு அருகில் அருள்மிகு சிவசுப்பிரமணியசுவாமி திருக்கோயில் அமைந்துள்ளது.

ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் நீலகிரி மலையில் தேயிலைத் தோட்டங்கள் அதிகம் தோன்றலாயின. தோட்டப் பணிகளுக்காக அங்கு சென்ற மக்கள் தமிழ் கடவுள் முருகப்பெருமானுக்கு சிறு கோவில் எழுப்பி வழிபட்டனர்.

இக்கோயிலில் விசாலாட்சி விசுவநாதர் ஆகியோருடன் முருகப்பெருமான் சிவசுப்பிரமணியராக அருள்பாலிக்கிறார். வள்ளி தெய்வானை இருபுறமும் உள்ளனர். விஷ்ணு துர்க்கை அம்மன் சந்நிதியும் உள்ளது.

கந்த ஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் மிகச் சிறப்பாக நடைபெறுகின்றன.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – இரவு 8.00 மணி

**தொலைபேசி: 0423 – 2238686**



## 59. அருள்மிகு தந்திமாரியம்மன் திருக்கோயில்

### குன்னூர்

“லாந்தர்’’ விளக்குக் கம்பத்தினடியில், ஊஞ்சல் ஆடுவது போல, காவலர் ஒருவருக்கு காட்சி தந்தவளே தந்தி மாரியம்மன். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் முதன் முதலாக “தந்திக் கம்பம்” இந்த “லாந்தர்” விளக்கு இந்தப் பகுதியில் அமைக்கப்பட்டதால், தந்தி மாரியம்மன் என்ற பெயரும் கொண்டாள் அன்னை.

காலப்போக்கில் திருக்கோயில் விரிவடைந்து, நின்ற கோலத்தில் அம்மன் சிலையும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. முதன் முதலில் அம்மன் தோன்றிய லாந்தர் மரக்கட்டை கருவறையில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. கருவறை விமானமும், மகாமண்டபமும் பின்பு அமைந்தன. சிறப்பு வழிபாடு நாட்களில் “வெள்ளிக்கவசம்“” சாத்தப்படுகிறது.

தந்தி மாரியம்மனைத் தவிர விநாயகர், குமரக்கடவுள், கருமாரியம்மன், காமாட்சியம்மன், காத்தாயி அம்மன், வனபத்திரகாளி, துர்க்கையம்மன், சமயபுரத்தாள் ஆகிய

திருமேனிகளும் அமைக்கப்பட்டுள்ளன.

ஆண்டுதோறும் சித்திரைமாதம், திருத்தேர்விழா, 27 நாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. நாள்தோறும் இரண்டு கால வழிபாடு நடை பெறுகிறது.

திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:

காலை 6.00 மணி – இரவு 9.00 மணி

## நட்சத்திர லிங்கங்கள்

சந்திரனின் 27 மனைவியரும், தட்சனின் புதல்வியருமான, அசுவனி, பரணி, ரேவதி ஆகிய பெண்கள் தட்சனின் சாபத்தால் வருந்திய தங்கள் கணவன் சந்திரன் குணம்பெற வேண்டி, பல தலங்களில் சிவபூஜை செய்தனர்.

அவர்கள் 27 லிங்கங்கள் அமைத்து வழிபட்ட தலங்களில் ஒன்று திருவொற்றியூர். இங்கு தியாகராஜ சுவாமி திருக்கோயில் தெற்கு சுற்றில், கிழக்கு மேற்காக அமைந்த மண்டபத்தில் 27 நட்சத்திரங்களின் பெயரால் 27 லிங்கங்கள் உள்ளன. அந்தந்த நட்சத்திரங்களின் பெயராலேயே அழைக்கப்படுவதோடு, வடிப்பிலும், வனப்பிலும், அளவிலும் பல வகையாக உள்ளன.

ஒரே மண்டபத்தில் 27 நட்சத்திரங்களைக் கொண்டது திருவிடை மருதுார் மகாலிங்கசுவாமி திருக்கோயில் ஆகும்.





## 60. அருள்மிகு விநாயகர் திருக்கோயில்
குன்னூர்

நீலகிரி மாவட்டத்தில், குன்னூர் நகரத்திற்கு மேலும் பெருமைசேர்ப்பது அருள்மிகு விநாயகர் திருக்கோயில். குன்னூர் நகரம் தோன்றிய போது அங்கு குடியேறி மக்கள் வழிபாட்டிற்காக முதன் முதலில் அமைத்த திருக்கோயில் என்ற பெருமை படைத்தது.

கிழக்கு நோக்கிய இந்த் திருக்கோயிலில் மூலவராய் முதல்வராய் விநாயகப்பெருமான் எழுந்தருளியுள்ளார்.

திருக்கோயிலுக்கு வெளியே மீனாட்சி சுந்தரேசுவரர் சந்நிதிகள் தனியாக உள்ளன. அய்யப்பசுவாமிக்கும், ஆஞ்சநேயருக்கும், பாண்டுரங்கனுக்கும் தனித்தனி சந்நிதிகள் உள்ளன. கீழே வனபத்திரகாளிக்கு ஒரு சந்நிதி அமைந்துள்ள து .

**அன்னதானம்**

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ள அன்னதானத் திட்டத்தின்கீழ் பக்தர்களுக்கு மதியம் அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

தினமும் மூன்று கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – மாலை 8.00 மணி

தொலைபேசி: 0423 – 5442754



## 61. அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில்

### அன்னமலை, கீழ்குந்தா

நீலகிரி மலைப்பகுதியில், மஞ்சூர் என்னும் கிராமத்திற்கு அருகில் "கீழ்குந்தா" என்னும் ஊர் உள்ளது. மலைகளின் அரசியான உதகைமண்டலத்திற்கு, மகுடம் வைத்தது போல் விளங்குகிறது இங்குள்ள அன்னமலை முருகன் ஆலயம்.

கோவையிலிருந்து காரமடை, வெள்ளியங்காடு, கெத்தை வழியே 65 கி.மீ. பயணித்தும், குன்னூரிலிருந்து 33 கி.மீ. பயணித்தும் செல்லலாம். "குன்று இருக்கும் இடம் எல்லாம் குமரன் இருக்கும் இடம் அல்லவா?" மலை உச்சியில், ஒரு கூடாரத்தில் அமைந்த குமரன் கோயில் இன்று எப்போது பக்தர்கள் வந்தாலும் அவர்களுக்கு அன்னதானம் அளிக்கும் "அன்னமலை" யாகப் புகழ்பெற்றுவிட்டது. நெடுந்தூரத்ல் இருந்து வரும் பக்தர்கள் பாதுகாப்பாகத் தங்கிச் செல்ல இரண்டு கூடங்களும் உள்ளன.

திருக்கோயிலின் முன்னே கருங்கல்லினாலான தீபத்தம்பம் உள்ளது. அதன் வலதுபுறம் இடும்பன் சந்நிதியும், இடதுபுறம் காவடியின் பின்னணியில் ஈஸ்வரன் சந்நிதியும் உள்ளது. நுழைவாயிலில் விநாயகருக்குத் தனிசந்நிதி.

கருவறையில், அழகுக்கு அழகு சேர்க்கும் அற்புதத்




தோற்றத்தோடு பாலதண்டாயுதபாணி அருள்பாலிக்கிறார். "ராஜஅலங்காரத்தில்" முருகனைக் காண்போர் பாக்கியம் பெற்றவர்கள். நிம்மதி தரும் சந்நிதி தான் அன்னமலை முருகன் சந்நிதி.

தமிழ்ப்புத்தாண்டில் முதல்நாளன்று காவடிப் பெருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. ஐயாயிரம் காவடிகளுக்கு மேல் அன்று, அன்னமலை நோக்கிச் செல்வது கண்கொள்ளாக்காட்சியாகும். உதகையின் பல பகுதிகளிலிருந்தும், கோவை மாவட்டத்தின் இதர பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் கூடும் நாள் அது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 6.00 மணி – மாலை 8.00 மணி

## கோமுகி

ஆறுகள் வானுலகிலிருந்து பூமிக்கு வந்து அதனைச் செழிக்க வைத்ததை புராணங்கள் பலவாறு விவரிக்கின்றன. பகீரதன் கங்கையை விண்ணுலகிலிருந்து பூமிக்குக் கொண்டுவர பலநூறு ஆண்டுகள் தவமிருந்ததை "பகீரதப் பிரயத்தனம்" என்பர். காவிரியையும் தாமிரபரணியையும் அகத்தியர் கொண்டு வந்தார் என்பர்.

இதே போல பூமி செழிக்க பசுக்கள் கொண்டுவந்த ஆறுகள் பல உள்ளன. தென்னாற்காடு மாவட்டத்தில் "கோமுகி" என்ற ஆறு பாய்கிறது. இமயமலைச் சாரலில் பசுக்கள் உண்டாக்கிய நதியே "கோமதி" என்று அழைக்கப்படுகின்றது. கோவை மாவட்டத்து காஞ்சியாறு, நொய்யலாறு என்றழைக்கப்படுகிறது.



## 62. அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்

### பொக்காபுரம்

நீலகிரி மாவட்டத்தில், கிழக்கு, மேற்குத் தொடர்ச்சி மலைகள் சந்திக்கும் மையப்பகுதியில் உள்ளது சோலூர். அதன் அருகில் உள்ளது பொக்காபுரம்.

முல்லை நில குரும்பர்கள், படுகர்கள் ஆகியோர் மூங்கில், கல் இவற்றால் அன்னையின் சிலைவடித்து வழி பட்டுள்ளனர். அதன்பிறகு விவசாயம் தோன்ற ஆலயம் ஒன்றும் உருவானது. பொக்காபுரத்து அம்மன் “பொதுவான அம்மன்” என்று கூறப்படுகிறது.

பாரி, பண்ணாரி, பத்திரகாளி, பொக்கா, பகவதி, மூகா, சாமுண்டி என ஏழு பெண்களாக அன்னை பராசக்தி வடிவம் கொண்டுள்ளார். பாரி என்றால் “வா” என்றும் பண்ணாரி என்றால் “வந்துபார்” என்றும் பத்திரகாளி என்பது “காக்கும் தெய்வம்” என்றும், பொக்காபுரம் என்றால் பொதுவான அம்மன் என்றும் பொருள்படுமாம்

ஏழு சகோதரிகளாகப் பிறந்த இவர்கள் சிற்றன்னையின் கொடுமைக்கு ஆளாகி, வனப்பகுதிக்கு

விரட்டப்பட்டனராம். அப்போது அவர்களில் ஒருத்தி யானை மீதும், மற்றவர் அனைவரும் புலிமீதும் அமர்ந்து வருவது போல முல்லைக்குரும்பர் கண்டு அதிர்ச்சியடைந்தனர். எழுவரில் "மசினி" மசினிகுடியிலும் "மாயா" மோயாரிலும், "சொக்கநள்ளி" சொக்கநள்ளியிலும், "சிரி" சிரியூரிலும், "மாசி" ஆனைகட்டியிலும், யானை மீது அமர்ந்தவள் ஆனைக்கல் என்னுமிடத்திலும் அமர்ந்துவிட்டு "பொக்கா" என்னும் மூத்தவள் சோலூர் அருகில் குடிபுகுந்தனராம். அதுவே பொக்காபுரம்.

கேரளத்து தந்திரிகள் சிலர் "காடம்புழா" என்னுமிடத்தில், பெரும் வேள்வியைத் துவக்கினர். பொக்காபுரத்து ஆதிபராசக்தி மனித உருவில் அங்கு சென்று, அவர்களது யாகத்தை அழித்தாள். மீண்டும் அவர்கள் பொக்காபுரத்தில் ஒரு வேள்வியைத் துவங்கியபோது, அன்னை முல்லைக் குரும்பர்கள் மூலமாகவே அவர்களது ஆணவத்தை அழித்து, அவர்களது, மந்திர, தந்திர சக்திகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டாள். எனவே மந்திர தந்திர மரபு முறைகள் இங்கு பின்பற்றப்படுவதில்லை.

மாதாந்திர வழிபாடு மட்டும் அமாவாசை முடிந்துவரும் செவ்வாய்க்கிழமைகளில் நடைபெறும். மாசிமாதம் தேர்த்திருவிழா "ஹாலானி பண்டிகை" என்று சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. வடநாட்டில் புலி மீது அமர்ந்த அம்மனை "ரோவாலி" என்று கொண்டாடுவர். அதே போல் புலிமீது அமர்ந்த கோலத்தில் பொக்காபுரம் மாரியம்மனை அம்மனை வழிபடலாம்.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

செவ்வாய், வெள்ளி, ஞாயிறு கிழமைகளில் மட்டும் காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை

**தொடர்புகளுக்கு: 0423 – 2442754**

(மாரியம்மன் கோவில் உதகை)



## 63. அருள்மிகு வேட்டைக்கொருமகன் திருக்கோயில்

### நம்போலாக்கோட்டை

நீலகிரி மாவட்டம், கூடலூர் – மைசூர் நெடுஞ்சாலையில் கூடலூருக்கு மேற்கே 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது நம்போலாக்கோட்டை சாலையின் இடது புறம் கோட்டை போன்று உயரமான இடத்தில் திருக்கோயில் அமைந்துள்ளது. இருபது படிகள் ஏறி, திருக்கோயிலைச் சென்றடையலாம்.

"வேட்டைக்கொரு மகன்" என்று வணங்கப்படும் தெய்வம் யார்? பாசுபதம் வேண்டி சிவபெருமானை நோக்கி அர்ஜுனன் கடுந்தவம் செய்தான். அப்போது வன வேடனாக, வில்லும், அம்பும் ஏந்தியபடி உமையம்மையோடு அவனை ஈசன் எதிர்கொண்ட கோலம் தான் அது. "கிராதமூர்த்தி" என்று கூறுவர்.

சிறு விளக்கொளியில், கதவிடுக்கு வழியேதான், மூலவரை தரிசிக்க முடியும். சிவலிங்கத் திருமேனி தான் அது. திருக்கோயில் வளாகத்திலே, மாங்காடு அம்மன் போல் அமைந்த "மங்குளி அம்மன்" சிலையும், அதன் அருகில் சில நாகர் சிலைகளும் உள்ளன.

வளாகத்தின் மற்றோர் பகுதியில், உள்ள கருவறை ஒன்றில் "கூரியவாள்" ஒன்று, பெட்டி ஒன்றில் வைக்கப்பட்டு, வழிபாடு நடைபெறுகிறது.

கேரளம், கர்நாடகம், மராட்டிய மாநிலங்களின் பாணியில், கருங்கல்லினால் செய்யப்பட்ட "அடுக்கு தம்பம்" தீபத்தம்பமாய் உள்ளன. இந்த அடுக்குத் தம்பத்தை ஆமைசுமந்து கொண்டு இருப்பது போல் அமைக்கப்பட்டுள்ளது.

ஆண்டுதோறும் ஐப்பசி மாதம் "புத்தரி" திருவிழா நடைபெறும். நெல் வயலில் புது நாற்று நடவு செய்து அதனை இறைவனுக்குப் படைத்து அனைவருக்கும் பிரசாதமாக வழங்கிய பின்புதான் விவசாய வேலைகள் தொடங்குவர்.

தாந்திரீக முறையில், ஒரு கால பூஜை நடைபெறுகிறது.

**திருக்கோயில் திறந்திருக்கும் நேரம்:**

காலை 7.00 மணி – காலை 10.00 மணி

மாலை 4.30 மணி – மாலை 6.30 மணி

## மயூரதாளம்

நடனத்திற்கு அடிப்படை "தாளக்கட்டு" ஆகும். "கணபதி தாளம்" என்று, திருக்கோயில்களில் குடமுழுக்கு மற்றும் திருவிழாக்களின் போது இசைக்கப்படுகிறது. ''மயில்'' நடனமாடும் ஜதிகளுக்கேற்ப இயற்றப்பட்டுள்ள நூல் "மயூர தாளம்" ஆகும். மயூர தாளம், மத்தளத்திலும், மிருதங்கத்திலும், கொன்னாக்கோலாகவும் இசைக்கப்படுகிறது.



## தங்கரதம்

கோவை மாவட்டத்தில் 6 திருக்கோயில்களில் “தங்கரத திருஉலா” நடைபெற்று வருகிறது.

உங்கள் இஷ்டதெய்வத்தின் உற்சவத்திருமேனியை அலங்கரித்து தங்கரதத்தில் அமர்த்தி தாங்கள் தங்கள் குடும்பத்தாருடன் தங்கரதத்தை இழுத்து திருக்கோயிலை வலம் வரலாம். தங்கள் பிரார்த்தனையை, நேர்த்திக்கடனை இறைவனிடம் செலுத்தி வாழ்க்கையில் வளம்பெறுவீர்! தங்கரத உலாவிற்கு உரிய கட்டணத்தை அறிய அந்தந்த திருக்கோயில் அலுவலகத்தை அணுகவும்.

1. அருள்மிகு விநாயகர் திருக்கோயில், ஈச்சனாரி

2. அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், மருதமலை

3. அருள்மிகு தண்டுமாரியம்மன் திருக்கோயில், கோவை

4. அருள்மிகு பாலதண்டாயுதபாணி திருக்கோயில், சுக்கிராவார்பேட்டை

5. அருள்மிகு மாசாணியம்மன் திருக்கோயில், ஆனைமலை.

6. அருள்மிகு வாசவி கன்னிகா பரமேஸ்வரி அம்மன் திருக்கோயில், வைசியாள் வீதி, கோவை நகர்.

## திருக்கோயில் திங்களிதழ்

தமிழக ஆலயங்களின் அற்புத தகவல்களையம், ஆன்மீக கருத்துக்களையும் தாங்கி வரும் கலைக் களஞ்சியமாக ஆன்மீக மாத இதழ் திருக்கோயில் திங்கள் இதழ் இந்துசமய அறநிலையத்துறை வெளியீடாக வெளிவருகிறது. நீங்களும் சந்தாதாரராகி பயன்பெருவீர்.

### சந்தா விபரம்

தனி இதழின் விலை ரூ. 15/

ஓராண்டு சந்தா ரூ. 175/

பத்தாண்டு சந்தா ரூ. 1700/

ஆயுட்கால சந்தா ரூ. 2500/15 ஆண்டு மட்டும்

இதற்கான பணவிடை / வங்கி வரை வோலை

Commissioner, HR & CE Department, Chennai-34.

### மேலும் விபரங்களுக்கு

ஆசிரியர்

திருக்கோயில் திங்கள் இதழ்

ஆணையர் அலுவலகம்

இந்து சமய அறநிலையத்துறை

119. உத்தமர் காந்தி சிலை

நுங்கம்பாக்கம், சென்னை – 600 034

தொலைபேசி எண் : 044 – 28334811/12/13

www.tnhrce.org

thirukkoil@tnhrce.org

Fax : 044- 28334816

